உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.( பட உதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# மௌனி

கி. அ. சச்சிதானந்தம்



சாகித்திய அகாதெமி

Mouni: Monograph . by K. A. Sachidhanandham. Sahitya Akademi,
New Delhi 2004 Rs. 25


முதல் பதிப்பு: 2004

ISBN 81-260-1711-2

சாகித்திய அகாதெமி

இரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி 110001.

விற்பனை
'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக்
கட்டடம், டாக்டர் அம்பேத்கார் வீதி, பெங்களூர் 560 001.

443, குணா காம்பளக்ஸ்(பழைய எண்.303 )அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை 600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4ஆவது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.

172, மும்பய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை
தாதர், மும்பய் 400 014.

விலை: ரூ. 25

அச்சு: வெங்கடேஷ்வரா என்டர்பிரைசஸ் சென்னை-14

# பொருளடக்கம்

# முன்னுரை

இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசையில் மௌனி மிக முக்கியமானவர். இன்னும் சொல்ல வேண்டுமெனில் மௌனி போன்ற எழுத்தாளர்கள் இல்லையென்றால் இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை கிடையாது.

சாகித்திய அக்காதெமி என்னை மௌனியைப்பற்றி சிறு நூலொன்றை எழுதும்படி கேட்டுக்கொண்டபோது எனக்கு மகிழ்ச்சியும் அதே சமயத்தில் தயக்கமும் ஏற்பட்டன. ஏனெனில் மௌனியுடன் நான் 1964 லிருந்து 1985ஆம் ஆண்டு அவர் கால மாகும் வரை நெருங்கிப்பழகியவன். அவர் நாற்பது ஆண்டுகளாக எழுதிவந்த சொந்த நாட்குறிப்பு நோட்டுகளை என்னிடம் கொடுத்ததும், பல கடிதங்கள் எனக்கு எழுதியதும் பல நாள்கள் சிதம்பரத்தில் அவருடன் தங்கி மணிக்கணக்கில் இரவு பகலாக அவர் வீட்டிலும் தில்லை நடராஜர் கோயில் பிரகாரங்களில் உட்கார்ந்து பேசியதும் எங்கள் நட்பின் நெருக்கத்தால் நிகழ்ந்தவையாகும். ஆக அவர் இறந்து பதினைந்து ஆண்டுகள் கழித்து அவரைப்பற்றி எழுதும் வாய்ப்பு கிடைத்ததில் மீண்டும் பழைய நினைவுகளில் ஆழ்ந்து போனேன். மேலும் அவர் உயிரோடு இருக்கும்போது, அவரது அறுபதாம் வயது நினைவு விழாவில் 1967 ஆம் ஆண்டில் 'மௌனி கதைகள்' தொகுப்பை மணிக்கொடி நிறுவனர் ஸ்டாலின் சீனிவாசன் தலைமையில் வெளியிட்டேன். பின்பு எல்லாக் கதைகளையும் என் பீக்காக் பதிப்பகத்தின் வெளியீடாக (மௌனியின் கதைகள்) 1991-ல் கொண்டுவந்தேன்.

இந்நூலை எழுதுவற்காக மீண்டும் கையெழுத்து பிரதியிலேயே உள்ள அவரின் நாட்குறிப்புகளையும், கதைகளையும் படித்தேன். இந்நூலை எழுதுவதற்கு அவை பெரிதும் உதவின.

மௌனியின் ஒரு கதையை மட்டுமே ஆங்கில மொழி பெயர்ப்பில் ஆண்ட்ரியா ஸ்கட்லர் என்ற ஜெர்மானியர் படித்தார். இது தற்செயலான நிகழ்வு. மௌனி அவரைக் கவர்ந்துவிட்டார். மௌனியை தமிழிலேயே படிக்க, கோலோன் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து, தமிழ் கற்று, தமிழ்நாடு வந்து மூன்று ஆண்டுகள் மௌனி

கதைகளை ஆய்வு செய்யும் அளவுக்கு அவர் வைராக்கியம் கொண்டார். எல்லா கதைகளையும் ஜெர்மனியில் மொழிபெயர்த்துள்ளார். அவர் எழுதிய பி.எச்.டி ஆய்வேடு கட்டுரை தமிழில் வந்தால் மௌனியின் மேதமை இன்னும் வெளிப்படும். அவருடன் பல தடவைகள் உரையாடும் போது எனக்கு மௌனியைப் பற்றி புதிய வெளிச்சங்கள் கிடைத்தன. அவையும் இந்த நூலை எழுத உதவின. மௌனி மகத்தான தமிழ் எழுத்தாளர்., இந்தியர் ஒவ்வொருவரும் பெருமைப்படக்கூடிய உலகச்சிறந்த சிறுகதை எழுத்தாளர்.

**கி.அ. சச்சிதானந்தம்.**

# 1

# மணிக்கொடியும் தமிழ்ச் சிறுகதையும்

தமிழ் இலக்கியத்தின் ஈராயிரம் ஆண்டு வரலாற்றில் உரைநடை என்பது ஐரோப்பியரின் தொடர்பால் வளர்ச்சி பெற்றது. இந்தக் கூற்று இந்திய மொழிகள் அனைத்துக்குமே பொருத்தமாகும். இலக்கியத்தின் வகைபாடுகளான கவிதை, கட்டுரை, நாவல், சிறுகதை இவற்றில் இறுதி மூன்றும் உரைநடையால் ஆக்கப்படுபவை. எனவே உரைநடையும் சிறுகதையும் வளர்ச்சி அடைவதற்கு ஒன்று மற்றொன்றைச் சார்ந்திருப்பதைக் காண்கிறோம்.

தமிழ்ச் சிறுகதை எப்போது தோன்றியது? ஐரோப்பியரின் இலக்கியம் ஆங்கிலமொழி மூலமாகத் தமிழுக்குக் கிடைத்த பின்புதான் சிறுகதை படைக்கப்பட்டதா அதற்கு முன்பு தமிழில் கதை என்பது கிடையவே கிடையாதா என வினாவை எழுப்பலாம். இந்த வினாவை எழுப்பி விடை காண்பதற்கு முன்பு சிறுகதை என்றால் என்னவென்று தெரிந்துகொள்ளவேண்டும். சிறுகதைக்கு ஒருமித்த வரைவிலக்கணம் கிடையாது. ஆனால் உலகப்புகழ் பெற்ற இலக்கியத் திறனாய்வாளர்களும் சிறுகதையாசிரியர்களும் அவ்வப்போது சொன்னவற்றையெல்லாம் எடுத்துக்கொண்டால் சில பொதுப் பண்புகள் வலியுறுத்தப்படுவதைக்காணலாம். அதாவது சிறுகதை என்பது அளவில் சிறிதாக இருக்கவேண்டும்; ஒரு நிகழ்ச்சியையோ அல்லது ஓர் உணர்ச்சியையோ கருவாகக்கொண்டு இருக்கவேண்டும்; சொற்சிக்கனமாகவும் இருக்கவேண்டும்; நறுக்கென்று தெரிவிப்ப தாகவும் இருக்கவேண்டும்; அதன் முடிவுதான் படிப்பவர் மனத்தில் தொடக்கமாக இருக்கவேண்டும். ஆனால் இவை சிறுகதையை அடை யாளங் காண உதவுமே தவிர, சிறந்தனவற்றைத் தேர்வு செய்ய பெரிதும் உதவாது. ஏனெனில் உலகத்தின் இறவாச் சிறுகதைகள் அவற்றையெல்லாம் உள்ளடக்கியும் தவிர்த்தும் இருப்பதைக் காணலாம்.

ஆக இந்தக் கூறுகளையெல்லாம் ஒட்டுமொத்தமாக எடுத்துக்கொண்டால் சிறுகதை என்ற இலக்கிய வகைப்பாடு தமிழில் - அனைத்து இந்திய மொழிகளிலுமே - ஆங்கிலமொழி மூலம் கிடைத்ததுதான் என்பது உறுதிப்படுகிறது.

இருபதாம் நூற்றாண்டில் இந்தியமொழிகள் வேகமாக வளர்ச்சி பெறுவதற்கு பல காரணங்களில் மிக முக்கியமான ஒன்று மகாத்மா காந்தி தலைமையின் கீழ் நடத்தப்பட்ட இந்திய சுதந்திரப் போராட்டமாகும். இந்தக் காலகட்டம்தான் உரைநடை வளர்ச்சிக்கு உகந்ததாக இருந்தது. பத்திரிகைகள் தொடங்கப்பட்டன. இந்திய வரலாற்றில் இதுவரை நிகழாத ஒன்று நடந்தது. சமுதாயத்தில் எவரும் கல்வி அறிவு பெறலாம் என்பதுதான் அது.. இது ஒரு மாபெரும் மௌனப் புரட்சியாகும். இதனால் பொது மக்களின் சிந்தனையிலும் உள்ளப் பாங்கிலும் ஏற்பட்ட மாறுதல்கள் மிகப் பெரியனவாகும். சுதந்திரப் போராட்டம் என்பது அரசியல் அடிமைத்தளையிலிருந்து - அதாவது ஆங்கிலேயேரின் ஆட்சியிலிருந்து விடுபடுவது மட்டுமே அல்ல; அவனின் பொருளாதார சுரண்டலிலிருந்தும், பண்பாட்டு ஆதிக்கத்திலிருந்தும் விடுபடுவதும் என்று வற்புறுத்தப்பட்டது. நம்மை வறுமையில் எப்போதும் வைத்திருக்கிறான்; நம் பண்பாட்டு விழுமியங்களையும், சிந்தனைகளையும் நாமே நகைக்கும்படி செய்கிறான். நம் புராதனக் கலைகளை அழிக்கிறான். இவற்றிலிருந்து விடுதலை காண்பதற்கு அரசியல் சுதந்திரம் ஒரு வலிமை மிக்க ஆயுதமாகும் என்று போராட்டத்தின் போது பத்திரிகைகள் வாயிலாக எடுத்துச் சொல்லப்பட்டது. இவற்றையெல்லாம் பொது மக்களுக்குச் சொல்லவும், சொன்னதைப் புரிந்துகொள்வதற்கும் உரைநடையால் முடிந்தது. எனவே பத்திரிகைகள் பெருமளவில் தோன்றின; உரைநடை வளர்ந்தது.

இருபதாம் நூற்றாண்டில் தமிழில் பத்திரிகைகள் வார, மற்றும் திங்கள் இதழ்களாக வெளிவரத் தொடங்கின. இவற்றில் இலக்கியத் திற்கு மட்டுமென்றே, சிலவேனும் இயங்கின. "ஆனந்த போதினி" , "பிரசண்ட விகடன்" "பாலபாரதம்" "விவேக போதினி" "இந்தியன்", "கலைமகள்" இப்படி பல இதழ்கள் அதற்காகத் தோன்றின. இவற்றில் "மணிக்கொடி"யும் ஒன்றாகும்.

இந்த "மணிக்கொடி" தான் தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் ஒரு மைல்கல்லாகும்.

'மணிக்கொடி' என்ற வாரமொரு (ஞாயிறு தோறும்) இதழைத் தொடங்கியவர் கு.சீனிவாசன். இவர் சுதந்திரப் போராட்டத்தில் பங்கு

கொண்டவர். இவர் ஆங்கிலப் பத்திரிகையில் தான் எழுதிவந்தார். தமிழில் அனைத்துலகச் செய்திகளையும் சொல்ல வேண்டும் என்பதற்காகத்தான் இந்த இதழைத் தொடங்கினார். தான் ஆங்கிலத்தில் எழுதிச் சம்பாதித்த பணத்தைக்கொண்டு இந்தப் பத்திரிகையை நடத்தினார். தமிழிலும் மிக அருமையான கட்டுரைகள் எழுதியுள்ளார். இவை கருத்தாழமும் சிந்தனை வளமும் கொண்ட கட்டுரைகளைத் தமிழில் எழுதமுடியும் என்பதற்குச் சான்றாக இருப்பவை. மணிக்கொடிக்கு வ.ராமசாமியை (பிற்காலத்தில் வ.ரா. என்று பெயரும் புகழும் பெற்ற எழுத்தாளர்) பொறுப்பாசிரியராகக் கொண்டு தொடங்கினார். வ.ரா. பாண்டிச்சேரியில் வாழ்ந்திருந்த பாரதியோடும் அரவிந்தரோடும் நெருங்கிப் பழகினவர்; சுதந்திரப் போராட்டத்தில் பங்கேற்று சிறை சென்றவர். சமூக சீர்திருத்த சிந்தனையாளர்; பல தமிழ் எழுத்தாளர்களை உருவாக்கியவர். இவரின் எழுத்தால் தமிழ் உரைநடை ஒரு புதிய பரிமாணத்தைப் பெற்றது. வ.ரா.நடை என்ற பாணியே உருவாகியது. 'சொல்வதைப் புரியும்படியாக சொல்லவேண்டும்; எளிமையாக இருக்கிறதே என்பது குறை அல்ல" என்று சொன்னார். அப்படியே எழுதியும் காட்டினார். இவருக்கு உதவியாசிரியராக பி.எஸ். ராமையா பணிபுரிந்தார். இவரும் பிற்காலத்தில் சிறுகதையாசிரியராகப் பரிணமித்தார். சுமார் நானூறு சிறுகதைகள் எழுதியுள்ளார்.

'மணிக்கொடி' தொடர்ந்து வரவில்லை; முக்கியமான காரணம் பொருளாதாரம்தான். அதாவது அந்தக் காலத்தில் வந்த 'ஆனந்த விகடன்' போல வணிக ரீதியாக வெற்றிபெறவில்லை. முதல் இதழ் 17.9.1933 ல் வெளிவந்து 12.12.1934ல் எழுபத்திரெண்டாம் இதழோடு, முதல் கட்டம் முடிவடைந்தது. இந்த கட்டத்தில் வ.ரா. பொறுப்பாசிரியராக இருந்தார். இரண்டாம் காலகட்டத்தில் பி.எஸ். ராமையா பொறுப்பாசிரியராக இருந்து, 31.03.1935ல் முதல் இதழ் வெளி வந்தது. நாற்பத்தாறு இதழ்கள் காலம் தவறி வந்து 1.02.1938-ல் நின்றுவிட்டது. மூன்றாம் கட்டம் ப.ராமசாமியை பொறுப்பாசிரியராகக் கொண்டு 1.2.1938ல் முதல் இதழ் வெளிவந்து இருபத்தைந்தாம் இதழோடு மூன்றாம் கட்டம் முடிவடைந்தது. மீண்டும் இது 1952ல் புதுப்பிக்கப்பட்டு நான்கு இதழோடு நின்றுவிட்டது.

'மணிக்கொடி' மூன்று கட்டமாக வெளிவந்தாலும் அது இரண்டாவது கட்டத்தில்தான் இலக்கிய ரீதியாக முக்கியத்துவம் பெறுகிறது. இந்தக் கட்டம்தான் தமிழ்ச் சிறுகதை இலக்கிய

வரலாற்றின் 'மணிக்கொடி' காலம் என்று அழைக்கப்படுகிறது. வ.ரா.வின் மணிக்கொடி அதன் சமகாலத்திருந்த 'சுதேசமித்திரன்' 'தமிழ்நாடு' 'இந்தியா' பத்திரிகைகளிலிருந்து வேறுபட்டு தனித்தன்மையாக இருந்தது. இதில் புதிய சிந்தனைகளும், சிறுகதை பற்றிய கட்டுரைகளும் வெளிவந்தன. பாரதிதாசனை மக்களுக்கு அறிமுகப்படுத்திய பெருமை இந்தக் காலக்கட்டத்தில்தான் நிகழ்ந்தது.

இரண்டாம் கட்டத்தில் 'மணிக்கொடியின்' பொறுப்பாசிரியரான பி.எஸ். ராமையா பத்திரிகையை எதற்காக எப்படி நடத்த வேண்டும் என்று மிகத் தெளிவாக இருந்திருக்கிறார். பத்திரிக்கை முகவர்களுக்கு அனுப்பிய இதழின் விளம்பரத்தில் 'அவ்வ்வ்வ்வ்வளவும் கதைகள்' என்று ஆறு 'வ்போட்டு' அதன் தனித்தன்மையை வற்புறுத்திக் காட்டினார். (மணிக்கொடி காலம். பி.எஸ். ராமையா, முதற்பதிப்பு -பக்.220). எனவே சிறுகதை எழுத்தாளர்களுக்கு 'மணிக்கொடி' பெரிய தளமாயிற்று. தமிழ்ச் சிறுகதை சாதனையாளர்களான புதுமைப்பித்தன், கு.ப. ராஜகோபாலன், ந.பிச்சமூர்த்தி, மௌனி, சி.சு. செல்லப்பா எல்லோரும் 'மணிக்கொடி'யில் எழுதினார்கள். மணிக்கொடியின் இலட்சியத்தை பி.எஸ். ராமையா கூறுகிறார்.

''தமிழ்நாட்டில் மக்களிடையே ஒளியைப் பரப்பி, அவர்கள் சிந்தனையைக் கிளறி மனத்தை விரியவைத்து புதிய வலுவான சமூகத்தைத் தோற்றுவித்து வளர்க்க வேண்டுமென்ற லட்சியம் அது. அந்த லட்சியத்தின் கவர்ச்சித்தான் என்னை அதற்குள் இழுத்துக் கொண்டது! பலசிறந்த சிந்தனையாளர்களையும், எழுத்தாளர்களையும் கவர்ந்து இழுத்தது.'' ('மணிக்கொடி காலம்' பி.எஸ். ராமையா. முதற்பதிப்பு- பக்.142)

பி.எஸ். ராமையாவின் மணிக்கொடியில் எழுதிய எழுத்தாளர் களான புதுமைப்பித்தன், கு.பா.ரா. போன்றவர்கள் மிகத் தெளிவாக பத்திரிக்கை பற்றி கருத்துக்கள் கொண்டிருந்தார்கள்.

''புதிய பரிசீலனைகளுக்கு இடம் கொடுக்கும், உற்சாகமூட்டும், வரவேற்கும் பத்திரிகை அதற்கு (மணிக்கொடிக்கு) முன்போ பின்போ கிடையாது'' (புதுமைப்பித்தன் 'ஆண்மை' முன்னுரை.)

''ஆனந்தவிகடன், கலைமகள், மணிக்கொடி இந்த மூன்று பத்திரிகைகளும் இந்தப் புது எழுத்திற்கு முதல் ஆதாரமாக இருந்தன வென்பது சென்ற பத்து வருட இலக்கிய நிகழ்ச்சிகளைக் கவனித்து வரும் எல்லோரும் அறிந்த விஷயம். புது எழுத்து முழுவதும் அநேகமாக அவற்றில் அடக்கமாகி இருக்கிறது என்றே சொல்லிவிடலாம்.''

''இந்த மூன்று பத்திரிகைகளுமே ஒருவிதத்தில் மூன்று மனப் பான்மைகளின் வாக்காக அமைந்துவிட்டன. ஆனந்தவிகடன் நுனிப்புல் மேயும் மனப்பான்மை கொண்டது. ஆழ்ந்து எதையும் ஆராய அதற்கு விருப்பம் இல்லை. வாழ்க்கையின் கஷ்டங்களைக் கண்டு சகிக்க அதற்கு வெறுப்பு. எனவே வாழ்க்கையில் மேலெழுந்த வாரியாகத் தென்படும் சுக சௌகரியங்களை மட்டும்தான் அது வாழ்க்கையில் கண்டறிய வேண்டியவை என்று கொள்கிறது. ஹாஸ்யம், கிண்டல், அதிலும் ஆழம் கிடையாது. சிக்கல்களை வெகு லேசாக ஒதுக்கிவிட்டு முகம் கோணாதபடி வாழ்க்கையின் சௌகரியமான அம்சங்களை மிகைப்படுத்திச் சித்தரிப்பது, துக்கத்தையும் வீழ்ச்சியையும் மகத்தான சோகங்களையும் கண்டு கண்மூடிக் கொண்டுவிடுவது. இவைதான் இந்த மனப்பான்மையின் சாரம். 'கல்கி' என்ற ரா. கிருஷ்ணமூர்த்தியும், எஸ்.வி.வியுமே இந்த மனப்பான்மையின் முதன்மையான எழுத்தாளர்கள். சிதம்பரநாத முதலியாரும் 'பி.ஸ்ரீ'யும் இதன் விமரிசகர்கள்.''

''கலைமகள் முக்கியமாகப் பெருவாழ்வின் மதிப்பைப் போற்றும் மனப்பான்மை கொண்டது. கற்பனையிலும் வாழ்க்கையிலும் பெருமையையும் பேரையும் அந்தஸ்தையும் கௌரவத்தையும் போற்றுவது இதன் இயற்கை. வாழ்க்கைப்போர் அலட்சியம் செய்ய வேண்டிய விஷயம். அது நிரந்தரமல்ல. முக்கியமல்ல. சீரும் செல்வமும்தான் வாழ்க்கையின் இலட்சியங்களை நிறைவேறச் செய்யும் கருவிகள். அவைதான் போற்றுதற்குரியவை. வாழ்க்கையின் இலட்சியம் - பெயர், பதவி, சுகம், கலாரசனை! இலட்சியத்திற்கொத்த கலை. சாமிநாதையர் அவர்களும் 'குமுதினியும்' இதன் எழுத்தாளர்கள் என்று சொல்லலாம்.''

'மணிக்கொடியின்' மனப்பான்மை புரட்சி. 'வாழ்க்கையிலும், சமூகத்திலும், ரசனையிலும் புரட்சி. 'புராணமித்யேவ நசாதுசர்வம்' (பழையது என்பதாலேயே எல்லாம் சிறந்தது அல்ல) என்று காளிதாசன் சொன்னதுதான் அதன் கொள்கை. போராட்டம்தான் அதன் உயிர். துக்கத்திலும் வீழ்ச்சியிலும் வறுமையிலும்தான் உணர்ச்சிகள் சிறந்து ஒளி கொண்டு ஜீவிக்கின்றன என்பது அதன் கொள்கை. சுகம், ஏமாற்றம், துக்கம்தான் உண்மை என்பது அதன் தீர்மானம். சர்வஜன ஓட்டின் தீர்ப்புப்படி உலகத்தில் பெருவாரியான மக்கள் அனுபவிப்பது இன்பமா? செல்வமா? பதவியா? இல்லை. அதனால் மணிக்கொடி மனப்பான்மை எங்கும் தென்படும் வறுமையையும் நோயையும்தான் ஆராய்ச்சி செய்கிறது. எதையும்

அது புறக்கணிப்பதில்லை. எல்லாம் இயல்பு, எல்லாம் பலவீனம் என்று தெளிவு கொள்கிறது. போராட்டம்தான் அதன் இலட்சியம். போரின் முடிவுகூட அவ்வளவு இல்லை."

"முதல் இரண்டு மனப்பான்மைகளும் கொஞ்சம் நிதான புத்தி கொண்டவை. மூன்றாம் மனப்பான்மை தீவிரப் போக்குடையது. இதற்குள்ளேயே பலபோக்குகள் இருக்கின்றன. உதாரணமாக வ.ரா. ஒருபோக்கு; பிச்சமூர்த்தி ஒரு போக்கு; புதுமைப்பித்தன் என்ற விருத்தாசலம் ஒரு போக்கு".

(கு.ப.ரா.வின் 'புது எழுத்து' கட்டுரை மறுபிரசுரம். 'எழுத்து' மே 59, பக். 148)

இப்படி முறையே புதுமைப்பித்தனும், கு.ப.ராவும் மணிக்கொடியை எழுத்தாளனின் இலட்சிய பத்திரிக்கையாகக் கருதி அதில் பங்கேற்றார்கள். அவர்களின் எதிர்பார்ப்பு பொய்த்துப் போகவில்லை என்பதை வரலாறு நிரூபித்துவிட்டது.

மணிக்கொடியில் எழுதியவர்கள் எல்லோருமே தனித் தன்மைகள் உடையவர்களாகவே சிறந்து விளங்கினார்கள். க.நா. சுப்ரமணியம் சொல்கிறார். "மணிக்கொடி கோஷ்டியினர் எல்லோரும் இலக்கியம் பற்றிய ஒரே கோஷ்டியாகவே, அது பற்றிய ஏகோபித்த சிந்தனையினாலேயே ஒன்று சேர்ந்தவர்கள் அல்லர். எல்லோருமே உதிரிதான். தனித்தனி மனமும் போக்கும் உடையவர்கள். ஒருவர்பால் ஒருவர் குற்றம் சாட்டித் தினவு தீர்த்துக்கொள்வதற்கு மற்ற தமிழ் எழுத்தாளர்களைவிட அதிகமாக அவர்கள் தயங்கினார்கள் என்றும் சொல்ல இயலாது. சிலபேர் அவரவர் மட்டில் நன்றாக எழுதினார்கள். இப்படி நன்றாக எழுதியவர்கள் பெயர்ப்பட்டியல் மற்ற காலகட்டங்களில் விடச் சற்று அதிகமாக இருந்தது. அதைத் தனியாக மணிக்கொடியின் சிறப்பு என்று சொல்லலாம்."

('மணிக்கொடி காலம்' க.நா. சுப்ரமண்யம், ஞானரதம், மார்ச் 1986, பக். 33)

மணிக்கொடி ஓர் இயக்கியமாக நடந்தது என்கிறார் கா. சிவத்தம்பி. "...மணிக்கொடி என்னும் சஞ்சிகை, இலக்கிய வளர்ச்சி பற்றித் தோன்றிய ஓர் இயக்கத்தின் சின்னம் என்பது புலனாகின்றது. இவ்வியக்கத்தின் அடிப்படை நோக்கம் இலக்கியப் பரிசோதனையே, இலக்கியப் பொருள் எதுவாக இருக்க வேண்டுமென்பது பற்றியும் அப்பொருள் எவ்வாறு கையாளப்படு மென்பது பற்றியும் கருத்தொற்றுமை கொண்டவர்களின் முன்னணியாக மணிக்கொடி

விளங்கவில்லை. மேனாட்டு முறைகள் உத்திகளில் நவீன தமிழ் இலக்கியத்தை உண்டாக்க விரும்பியோரின் கூட்டணியாகவே மணிக்கொடி அமைந்தது. புனைகதைத் துறையிலும், கவிதைத் துறையிலும், புதியவற்றைப் புகுத்தவும் புதிய முறையிற் கூறவும் விரும்பியோரே இதில் முக்கிய இடம் வகித்தனர்."

(தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும் கா. சிவத்தம்பி. இரண்டாம் பதிப்பு. பக். 46-47)

பி.எஸ். ராமையா நடத்திய மணிக்கொடியில் எழுதிய எழுத்தாளர்களின் பட்டியலையும் அவர்கள் படைப்புகளின் எண்ணிக்கையையும் சி.சு. செல்லப்பா தருகிறார்.

"நாற்பத்தி ஆறு இதழ்களில் முன்னூற்றி தொண்ணூற்றி நான்கு (394) கதைகள் வந்தன. அவற்றில் ஐம்பத்தெட்டு (58) மொழி பெயர்ப்புக் கதைகள் போக முன்னூற்றி முப்பத்தாறு சுயம் கதைகள் வெளி வந்தவை. சுமார் எழுபது பேர்கள் எழுதியிருக்கிறார்கள்.

"இவர்களில் பதினேழு பேர்கள் அதிகமான சிறுகதையை எழுதியவர்கள். இவர்களது நூற்றி ஐம்பத்தி நான்கு (154) சிறுகதைகளை இன்று சேர்த்துப் படிக்கிறபோது சிறுகதை மலர்ச்சி இயக்கம் எவ்வாறு தோன்றி வளர்ந்தது என்பதை அறியமுடியும். அவற்றை எழுதியவர்களும் எழுதிய தொகையும் பின்வருமாறு. பி.எஸ். ராமையா (20). ந. பிச்சமூர்த்தி (11) புதுமைப்பித்தன் (17) கு.ப. ராஜகோபலன் (6) பெ.கோ. சுந்தர ராஜன் (12) சி.சு. செல்லப்பா (12) சிதம்பரசுப்ரமண்யன் (10) மௌனி (8) தி.ஜ. ரங்கநாதன் (11) சங்கு சுப்ரமண்யன் (3) க.நா. சுப்ரமண்யம் (4) கி.ரா. (17) பி.எம். கண்ணன் (8) சுந்தா (8) எம்.வி. வெங்கட்ராம் (8)ரா.ஷண்முகசுந்தரம் (4) (மணிக்கொடி சிறுகதை முதல்வர்கள். சி.சு. செல்லப்பா. பக். 10-11).

# 2

# வாழ்க்கையும் எழுத்தும்

மௌனியின் இயற்பெயர் எஸ். மணி. 1907 ஆம் ஆண்டு ஜூலை 27ம் நாள் தஞ்சை மாவட்டத்திலுள்ள செம்மங்குடி கிராமத்தில் பிறந்தார். அவர் தான் பிறந்த ஊரைப்பற்றி எழுதுகிறார்.

"கும்பகோணம் திருவாரூர் பஸ் பாதையில், குடவாசலைக் கடந்து, மேலும் ஐந்து மைல் செல்ல, காப்பணாமங்கலம் கிராமம் வரும். காப்பணாமங்கலத்திலிருந்து நேர் வடக்கே இருக்கும் பெரும் பண்ணையூர் செல்ல, ஆற்றிற்கு அங்கு ஒரு பாலம் இருக்கிறது. அதைக் கடந்தவுடன் கிளைப் பாதை என ஆற்றின் வடகரையிலும் தோப்பினுள்ளும், கோணல்மாணலாக செல்லும் ஒரு குறுகிய வண்டிப்பாதையில் அரை மைல் கிழக்கே சென்றால் செம்மங்குடியை அடையலாம்" (மௌனியின் கதைகள். தன் ஊர் தேடல். பக். 298).

"இது சின்ன கிராமமாக இருந்தாலும் பல கோயில்கள் இருக்கின்றன. வரிசைக்கு சுமார் இருபது வீடுகளைக் கொண்ட ஒரு கிழக்கு மேற்கு வீதிதான் அக்கிரகாரம். மேலக்கோடியில் தெருவைப் பார்த்து நிற்கிறது ஸ்ரீதேவி, பூதேவி சமேத ஸ்ரீநிவாசப் பெருமாள் கோவில். கீழ்க்கோடியில் நேராக இன்றிச் சிறிது வடக்கே தள்ளி கிழக்கே எட்டிய தூரம் வரையில் காணக்கிடக்கும் வயல் வெளியைப் பார்த்து நிற்கும் கோவில் ஆனந்தவல்லி சமேத அகஸ்தீச்சுவரர் கோவில்... ஊருக்குக் குலதெய்வமாக விளங்கும், 'கரும்பாயிரம் கொண்டவர்' ஆற்றங்கரையிலே தேடிக்கண்டு பிடிக்கும் வகையில் ஒரு சிறு கூரைக்கு அடியில் இருக்கிறார்" (மேல்படி நூல் பக். 298)

காவிரி ஆற்றுக் கிளைநதிகள் பாயும் இடமானதால் இயற்கை அழகு எங்குப் பார்த்தாலும் நிறைந்திருந்திருக்கிறது. ஆற்றில் பல மணி நேரங்கள்மௌனி நீந்திக்கொண்டிருப்பார். அங்கு இருக்கும் ஒவ்வொரு மரத்தையும் தான் நன்கு அறிந்திருப்பதாக ஓரிடத்தில் எழுதி யிருக்கிறார். அதனால்தான் அவர் கதைகளில் எல்லையற்ற வானம், அகண்ட வெளி, பறவைகள், நட்சத்திரங்கள், அமைதி - இவை பல இடங்களில் வருகின்றன. இவர் கதைகளில் குறிப்பாக

வரும் மரங்கள் வெறும் மரங்களல்ல. எடுத்துக்காட்டு: "எங்கிருந்தோ மகிழம்பூ மணம் மூக்கில் இனிக்க உணர, அந்த இரண்டு மரங்கள் இருந்த இடத்தைப் பார்க்கிறேன். காலடியில் சிதறிய தன் பூக்களின் வாசனையை தாமே குளிந்து மகிழ்ந்து நிற்பது போன்றவை, இருந்த இடத்தில் இல்லை. ஆயிரம் காலத்திற்குப் பின்னும் வாடவாட மணம் கமழ விட்டு எங்கேயோ சென்றனவே போலும்... (மேல்படி. நூல் பக். 300)

மௌனி கும்பகோணத்தில் 1926ல் தன் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, திருச்சிக்கு கல்லூரி படிப்புக்காகச் சென்றார். அங்கே 1929ம் ஆண்டு வரை . பி.ஏ. ஆனர்ஸ் பட்டப்படிப்பு படித்தார். கணிதத்தைத் தன் பட்டப்படிப்பிற்காக எடுத்துக்கொண்டார். கல்லூரி நாள்களில் இவர் விளையாட்டுகளில் - குறிப்பாக ஓட்டப்பந்தயத்தில் பெரும் விருப்பம் கொண்டிருந்தார். இவர் 'மைல்' மணி என்று அழைக்கப்பட்டார். அதாவது ஒரு மைல் நீள ஓட்டப் பந்தயத்தில் போட்டியிட்டு பரிசுகள் வாங்கி இருக்கிறார்.

அவர் காலத்தில் இந்தியச் சுதந்திரப் போராட்டம் மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ் சூடுபிடித்துக் கொண்டிருந்தது. இந்தியா வெங்கிலும் மாணவர்கள் தாம் படிப்பதை விட்டுவிட்டு பள்ளிகளி லிருந்தும் கல்லூரிகளிலிருந்தும் வெளியேறினர்; சுதந்திரப் போராட்டத்தில் நேரடியாகவே பங்கு கொண்டனர். மௌனி இப் போராட்டத்தில் பங்கு கொள்ளாவிட்டாலும் அதை எதிர்க்கவில்லை. அவருக்கு ஓர் அண்ணனும் ஒரு தம்பியுமாக உடன்பிறந்தவர்கள் இருவர். இம்மூவரில் மணிதான் அறிவுகூர்மை யானவன் என்பது அவரது தந்தையாரின் கணிப்பாகும். ஆகவே மணி ஐ.சி.எஸ். எழுதி தேர்வுபெற்று கலெக்ட்டராக வருவார் என அவர் தந்தையார் அவரைப் பார்க்க வருபவர்களிடம் சொல்லி வந்தார். அவர் காலத்தில் இங்கிலாந்திற்குப் போகாமலே தில்லியிலேயே ஐ.சி.எஸ் எழுதலாம் என பிரிட்டிஷ் அரசாங்கம் அறிவித்தது. ஐ.சி.எஸ். எழுத மணி தில்லிக்குப் போனார். அவருக்கு இந்தி தெரியாததால், பரீட்சை நடத்தும் இடத்தைத் தேடி கண்டுபிடித்து அங்கே போவதற்கு முக்கால் மணி நேரம் தாமதமாகிவிட்டது. அதனால் அவர் பரீட்சை எழுத அனுமதிக்கப்படவில்லை. மிகுந்த துயருடன் தில்லியிலிருந்து வீடு திரும்பும் வழியில் ஆக்ராவுக்குச் சென்று தாஜ்மகாலைப் பார்த்தார். இந்தச் செய்தியை இந்நூலாசிரியருடன் இப்படிச் சொன்னார். "நேரம் கழித்துப் போனதால் பரீட்சை எழுதவிடவில்லை. லங்கடா பாஷை (இந்தி) தெரியாததினால் வந்த வினை. டோங்காகாரன் சொன்னது எனக்கு புரியலை. நான் சொன்னது அவனுக்கு புரியலை. என்ன

செய்வது என்று புரியாமல் தவித்தேன். நான்தான் பெரிய சாதனை செய்வேன் என்று என் அப்பா எதிர்பார்த்தார். அவரை ஏமாற்றத்திற்கு உள்ளாக்கிவிட்டேனே என்று எனக்கு வருத்தம். அதனாலே எனக்கு அழுகை வந்துவிட்டது. அழுவதற்கு ஏற்ற இடம் தாழ்மகால் என்று எனக்குப் பட்டது. அதனாலே அங்குப் போனேன்."

இந்த முயற்சிக்குப் பின்பு அவர் எந்த வேலையும் தேடவில்லை. கணிதவியலில் ஒரு பிரிவான 'எண்கள் இயலி'ல் மௌனிக்கு மிகவும் ஈடுபாடு. எண்கள் கோட்பாட்டில் இவருக்கு ஆழ்ந்த அறிவு உண்டு. அவர் தான் படித்த 'எண்கள்' சம்பந்தப்பட்ட புத்தகங்களை தான் காலம் ஆகும்வரை அதாவது ஐம்பதாண்டுகள் பத்திரமாக தன் புத்தகப்பீரோவில் வைத்திருந்தார். பிற்காலத்தில் அவருக்கு தத்துவத்தில் ஈடுபாடு ஏற்பட்டது. ஐரோப்பிய, இந்தியத் தத்துவங்களை ஆழமாகப் படிக்காவிட்டாலும் ஓரளவிற்குப் படித்திருந்தார். இந்தியத் தத்துவத்திற்கு மூல ஆதாரங்களான உபநிடதங்களை அவர் படிக்கும்போதுதான் தான் சமஸ்கிருதம் படிக்காமல் போய்விட்டேனே என்று வருத்தப்பட்டதை இந்நூலாசிரியருடன் சொன்னதுண்டு. அதனால் பழைய புத்தகக் கடையில் கண்ணில்பட்ட சமஸ்கிருத புத்தகங்களைத் தன்னால் படிக்க முடியாவிட்டாலும் வாங்குவார். பின்பு சமஸ்கிருதம் அறிந்தவர்களிடம் அவற்றைக் கொடுப்பதை நானறிவேன்.

வேலைக்குப் போகாமல் எப்படிப் பொழுதை போக்கினார் என்பதை அவரே கூறுகிறார்.

"35 ஆண்டுகளுக்கு முன் படித்து முடித்து, வேலைக்கென்று ஒன்றும் போகாமல் கும்பகோணத்தில் காலம் கழிக்கும் அநேக மாஜி மாணவர்களில் நானும் என் மனப் போக்கிற்கிசைந்த ஐந்தாறு பேர்கள் சேர்ந்த ஒரு கோஷ்டியில் ஒருவனானேன். ஆர்வ மிகுதியில் படித்தும், தெளிவு காண அநேக விஷயங்களைப் பற்றி விவாதித்தும் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தோம். எத்துறை என்பதின்றி, அரசியல் - சங்கீதம் - வேதாந்தம் - மொழிப் பிரச்னை - இலக்கியம் இத்யாதி எதையும் பற்றி ஆங்காங்கே அவ்வப்போது கூடிப்பேசுவது உண்டு" (பி.எஸ். ராமையா மணி விழாமலர். மே.1965 'எனக்குப் பெயர் வைத்தவர்.' பக். 22).

அவர் பொழுது போக்குவதற்காகவோ அல்லது சம்பாதிப்பதற் காகவோ டியூஷன் சொல்லிக் கொடுத்தார் என்பது சரியாகத் தெரியவில்லை. கும்பகோணத்தில் ஒரு பணக்கார மாணவனுக்கு கணக்குப் பாடம் சொல்லித் தந்திருக்கிறார். "சரியானது எதையும்

அவன் மூளை ஏற்க மறுக்கிறது. அவனோடு இது வேறே கஷ்டம். மேத்ஸ் மட்டும் வரவில்லை என்று என்னை டியூடராக வைத்தார்கள். ஆனால் அவன் எந்த சப்ஜெக்டில் கெட்டிக்காரன் என்று அவனுக்கே தெரியவில்லை."(என் இலக்கிய நண்பர்கள் எம்.வி. வெங்கட்ராம். ப.73-74)

இவர் கும்பகோணத்திலிருக்கும் போதே சிறுகதைகள் எழுதத் தொடங்கினார். மௌனி தான் எழுத்துலகில் பிரவேசித்ததை பற்றி எழுதுகிறார்.

"1933 ஆம் வருஷத்தில் மகாமகம் வந்தது. அதற்காக ஒரு விரிவான கண்காட்சி ஒரு மாதம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த ஒரு மாத காலம் அம் மைதானத்தில் நாங்கள் கூடிப்பேசி பொழுதைக் கழித்தோம். அந்த சமயந்தான் திரு ராமையா எங்களுக்கு அறிமுகமானது. அவர் கதர்போர்ட் ஸ்டாலுக்காக வந்திருந்தவர் என நினைக்கிறேன். எங்களுடைய நண்பர் ஒருவர் சென்னையில் சட்டக் கல்லூரியில் படித்தவருக்கு இவரை தெரிந்ததின் மூலமாக எங்களுக்கு அறிமுகமானவர். எங்கள் மத்தியில் எங்கள் பேச்சிலும் கலந்து கொள்ளுவார்."

"ஒருநாள் ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் கூறியது ஞாபகத்தில் இருக்கிறது. அதுதான் உள்ளூர பதிந்து ஒரு வருஷத்திற்கு மேலாக ஊறி என்னை எழுதும்படி தூண்டியது போலும். என்னைப்பார்த்து 'நீங்கள் சிறுகதைகள் நன்றாக எழுதமுடியுமென நினைக்கிறேன். மணிக்கொடி பத்திரிகைக்கு எழுதுங்கள்' என்று அவர் சொன்னார். எவ்விதத்தில் நான் சிறுகதை ஆசிரியனாக முடியும் என்று அவருக்குத் தோன்றியது என்பதை அவரால்தான் சொல்ல முடியும்! அப்போது அவருக்கு மணிக்கொடியில் தொடர்பு இருந்ததே தவிர பொறுப்பு இல்லை என்று நினைக்கிறேன். மகாமகம் முடிந்து ஒன்றரை வருஷங்கள் ஆகிவிட்டது. ராமையாவின் ஞாபகத்தோடு நான் சிறுகதை எழுதும் நோக்கமும் சென்றுவிட்டது."

"35ம் வருஷம் இறுதியில் ஏதோ ஒரு வேகத்தில் 6,7 சிறு கதைகளும் ஒரு நெடுங்கதையும் எழுதினேன். பிரசுரிக்கும் நோக்கம் எனக்கு இல்லை. எழுத முடிகிறதா என்று பார்க்கும் நோக்கம் போலும். மேலும் அதன் மதிப்பை தெரிந்து கொள்ள என் நண்பரில், துல்லிய இலக்கிய சுரணை உள்ள ஒருவரிடம் கொடுத்து அவர் அபிப்பிராயத்தை கேட்டேன். அவர் சொன்னது நான் எதிர்பார்த்ததை விட கொஞ்சம் திடுக்கிட இருந்தது. ஒரு விதத்தில் அவைகள் உயர் தரமான தென்றும் தமிழில் அம்மாதிரி ஒன்றும் இருந்ததில்லை என்றும்

மேலும் அதைப் போடக்கூடிய பத்திரிகைகள் கூட இல்லை என்றும் சொல்லிவிட்டு எப்படியாவது அதைப் பிரசுரிக்க ஏற்பாடு செய்யும்படி சொன்னார்.

"நான் எழுதியவைகளை மேலே குறிப்பிட்ட என் வக்கீல் நண்பரிடம் அனுப்பி எந்தப் பத்திரிகை ஆசிரியரிடமாவது காட்டி போடத் தகுதியுள்ளதாயின் போடும்படியும் எழுதியிருந்தேன். பத்து தினங்களுக்குள் இவைகளை ராமையாவிடம் கொடுத்ததாயும், அதைப் படித்து மிக நன்றாக இருப்பதாகப் பாராட்டி தன் மணிக் கொடியிலேயே பிரசுரிப்பதாக அவர் சொன்னதாகவும் பதில் வந்தது.

"1936 பிப்ரவரியில் என் முதல் கதை பிரசுரமாகியது. பிறகு ஏப்ரலில் நான் எழுதிய நாலாவதோ ஐந்தாவதோ இரண்டாவதாக 'காதல் சாலை' என்ற தலைப்பில் வெளிவந்தது."

(பி.எஸ். ராமையா மணிவிழா மலர் மே 1965 'எனக்குப் பெயர் வைத்தவர்' மௌனி. ப. 22)

மௌனி அவர்களின் சிறுகதைகள் மொத்த எண்ணிக்கை இருபத்து நான்கேதான்! இவற்றில் மணிக்கொடியில் 1936-37 காலகட்டத்தில் வெளியான கதைகள் பன்னிரெண்டாகும். ஆக மௌனி சிறுகதை இலக்கியமும் 'மணிக்கொடியும்' பிரிக்கமுடியாத படிக்கு ஆகிவிட்டன.

மௌனி என்ற புனைபெயர் ராமையாவால்தான் சூட்டப்பட்டது. பி.எஸ்.ராமையா எழுதுகிறார்.

"டி.கே.ராஜகோபாலன்தான் மணியின் கதையை மணிக்கொடி அலுவலகத்தில் கொண்டுவந்து கொடுத்தார். அந்தக் கதையைப் பிரசுரித்து அதே இதழில் முதல் அத்தியாயப் பகுதியில் 'இதுதான் இவர் முதல் முதலாக எழுதிய கதை. இவ்வளவு ரசனை நிறைந்த ஒருவர் இதுவரை 'ஏன் எழுதாமலிருந்தார்' என்பதுதான் நமக்கு ஆச்சரியமாக இருக்கிறது. 'சம்பாஷணைகள், மனோநிலை வர்ணனைகள் எதுவுமின்றி வெறும் வெளித்தோற்றங்களையே விவரித்திருக்கிறார்! அதனூடே எவ்வளவு சாதுர்யமாகப் பாத்திரங் களின் உணர்ச்சிகளைப் படம்பிடித்துக்காட்டி விடுகிறார்" என்று அந்தக் கதையை அறிமுகம் செய்து வைத்திருந்தேன். கதையை என்ன பெயரில் பிரசுரிக்க வேண்டுமென்று அவர் குறிப்பிடாததால் நானே அவருக்கு "மௌனி" என்று புனைபெயர் சூட்டி வெளியிட்டேன். அந்தப் பெயரிலேயே அவர் தொடர்ந்து மேலும் சில கதைகள் எழுதினார்."(மணிக்கொடி காலம். பி.எஸ்.ராமையா. ப.260)

வாழ்க்கையில் தற்செயலாக நிகழும் சில சம்பவங்கள் திருப்பு முனைகளாகி முக்கியத்துவம் பெற்று விடுகின்றன என்பதற்கு எடுத்துக் காட்டு 'மௌனி ' என்ற பெயர் சூட்டல். இந்தப் பெயரே தமிழ் இலக்கிய வரலாற்றில் நிலைத்துவிட்டது.

தந்தை காலமான பிறகு கூட்டுக் குடும்பம் பிரிந்து போனதும், மௌனி 1943 ஆம் ஆண்டு சிதம்பரத்திற்கு இடம் பெயர்ந்தார். அங்கே நிரந்தரமாகக் குடியேறி தன் வாழ்நாள் முழுவதையும் அங்கேயே கழித்தார். சிதம்பரத்திற்கு அருகிலுள்ள மணலூரிலுள்ள சில நிலங்கள் இவருக்கு பாகமாக வந்தது. அவற்றிலிருந்து வரும் வருமானத்தைக் கொண்டுவாழ்ந்தார். ஒரு நெல் அரவைமில்லும் தன் பிழைப்புக்காக நடத்தினார். சிதம்பரத்திலுள்ள அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் நூலகம் மௌனிக்கு பெரிதும் பயனுள்ளதாக இருந்தது. அதாவது மௌனி இறக்கும் வரை ஓயாமல் படித்துக்கொண்டே இருந்தார். ஒரு கண், அறுவை சிகிச்சைக்குப்பிறகு முற்றிலும் பார்வை இழந்து போயிற்று. இன்னொரு கண் பார்வை சக்தி கொஞ்சம் கொஞ்சமாக மங்கிப்போகத் தொடங்கியது. மேலும் இரத்த அழுத்தத்தினால் தொடர்ந்து சில மணிநேரம்கூடப் படிக்க முடியவில்லை. பெரிய பூதக் கண்ணாடியுடன் படிப்பதை வழக்கமாக்கிக் கொண்டார். அவருடன் சுமார் இருபதாண்டுகள் நெருங்கிப் பழகியதால் மறக்கமுடியாத சம்பவங்கள் எனக்கு ஏற்பட்டன. அவர் சில வேளைகளில் மிகச் சுருக்கமாக ஆனால் நெஞ்சத்தில் தைக்கும்படி பதில் சொல்வார். ஒரு தடவை, அவர் கைப்பிடியுள்ள வட்டமான பூதக் கண்ணாடியை வலது கையால் பிடித்தபடி, புத்தகத்தை, பார்வையுள்ள அந்த ஒரே கண்ணருகே வைத்தபடி படித்துக்கொண்டிருப்பதைக் கண்டபோது கேட்டேன். "ஏன் சார், இப்படி அவதிப்பட்டு படிக்கவேண்டும். யாரையாவது படிக்கச்சொல்லி கேட்பதுதானே?" அவர் தன் குனிந்த தலையை நிமிர்த்தி என்னைக் கேட்டார் "மூச்சுவிடுவது கூட கஷ்டமாக இருக்கிறது. அதனால் சுவாசிப்பதையே விட்டுவிடு என்கிறாயா?" என்னால் பதில் சொல்ல முடியவில்லை. ஆக அவருக்கு படிப்பதும் உயிரோடு இருப்பதும் ஒன்று என்பதை உணர்ந்துகொண்டேன்.

அண்ணாமலைப் பல்கலைக்கழக நூலகத்தைப் பற்றி அவர் பேசும் போதெல்லாம் அவர் மனத்தில் மகிழ்ச்சிப் பொங்குவதைக் கண்டிருக்கிறேன். எனக்குத் தெரிந்தவரையில் - அதாவது இருபதாண்டு காலமாக அவர் சட்டை அணிந்து நான் பார்த்தது கிடையாது. ஒரு மெல்லிய, துவைத்ததினால் பழுப்பேறிய நீண்ட வெள்ளை மேல் துண்டுதான் அவர் மார்பையும் முதுகையும்

மறைத்துக்கொண்டு அவரின் முதுகெலும்போடு ஒட்டிப்போயிருக்கும் வயிறைக் காட்டும். அவர் சென்னையில் கண் அறுவை சிகிச்சைக்காக ஒரு வாரத்திற்கு மேல் கோடம்பாக்கம் நர்சிங்கோமில் தங்கியிருக்கும்போது அவருக்குத் துணையாக இருந்தேன். அப்போதும் அவர் சட்டை அணியாமலேதான் வந்திருந்தார். சிதம்பரத்தில் எங்கு போனாலும்- சைக்கிளில்தான் போவார். இந்த நூலகத்திலிருந்துதான் ஐரோப்பிய இலக்கியத்தின் பெரும் எழுத்தாளர்களின் நூல்களைப் படித்தார். நான் எவருடைய படைப்புகளெல்லாம் படித்திருக்கிறீர்கள் என்று கேட்டபோது சொன்னார் ''எவனை படிக்காமல் விட்டேன். செகாவ், தாஸ்த்தாவஸ்க்கி, டால்ஸ்டாய், காஃப்கா, ஆண்ட்ரீ ஜீட், ராபர்ட் மூசில், புரௌஸ்ட்,சாமுவேல் பெக்கட், போர்கே, வில்லியம் சரோயன், டேனிஷ் தத்துவவாதி கிர்க்கீகோர்.... இப்படி அவரின் பட்டியல் நீண்டது. பிற்காலத்தில் சங்கரரின் அத்வைதம் அவருக்கு ஏற்புடையதாக இருந்தது. ஒரு தடவை என்னிடம் சொன்னார், ''இந்த பௌத்தர்கள் தர்க்கத்தில் மகா கெட்டிக்காரர்கள். சில இடங்களில் சங்கரரே தடுமாறுகிறார். தடுமாறுமிடத்தில் சங்கரர் பௌத்தரின் தர்க்கத்தை ஆயுதமாக எடுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று'' தத்துவ நூல்களை அவர் படித்தது வெறும் அறிவுக்காக அல்ல. மௌனியுடன் பேசுவது மிகவும் சுவாரசியமாக இருக்கும்; எப்போது என்றால், அவர் தத்துவத்தை தொடும்போது. மௌனி உரையாடும்போது நிறைய 'பள்ளங்கள்' விழும்- அதாவது அவர் 'தாவித் தாவி' செல்லுவார்; கேட்டவர் அந்தப் 'பள்ளங்களை' நிரப்பிக்கொண்டு செல்ல முடியாவிட்டால், அவரிடமிருந்து விலகி வந்துவிட வேண்டியதுதான். அவருக்கு சில விஷயங்களில் அபார நினைவு ஆற்றல் இருந்தது; முக்கியமாக தான் படித்தவற்றை மேற்கோளாகக் காட்டும்போது.

க.நா. சுப்ரமண்யம் சிதம்பரத்திற்குச் சென்று மௌனியுடன் நட்பை ஏற்படுத்திக் கொண்டார். புதுமைப்பித்தனும் தன்னைப் பார்க்க சிதம்பரத்திற்கு வந்ததாக என்னிடம் பல தடவைகள் சொல்லி யிருக்கிறார். சிதம்பரத்திற்கு வந்ததும் மௌனி எழுதுவதை அடியோடு நிறுத்தி விட்டார் என்று சொல்ல முடியாது. ஏனென்றால் ஒரு பெரிய நோட்புக்கில் அவ்வப்போது எழுதிக் கொண்டு வந்தார். இதிலிருந்துதான் பிற்காலத்தில் எழுதப்பட்ட கதைகள் உருவாகின. அவர் தன் நெல் அரவை மில் உண்டு, தன் படிப்புண்டு என்று வாழ்ந்து வந்தார். இலக்கியக்காரர்களை சந்திப்பதற்கு அவருக்கு வாய்ப்பு இல்லை. அவர் சிதம்பரத்திற்கு வந்தபின் பல ஆண்டுகளுக்கு பின்பு எம்.வி. வெங்கட்ராம் நடத்திய 'தேனீயில்' அவரின் இடைவிடாத

வேண்டுகோளின்படி இரண்டு கதைகள் எழுதினார். அவ்விரு சிறுகதைகளான 'மனக்கோலம்' 'நினைவுச்சுவடு' இரண்டும் 1948 தேனீயில் பிரசுரிக்கப்பட்டன. 'தேனீ'யும் நின்றுவிட்டது. ஆறு ஆண்டுகள் கழித்து அதாவது 1954யிலும், இன்னொரு ஐந்தாண்டுகள் கழித்து 1959யிலும் முறையே 'சாவில்பிறந்த சிருஷ்டியும்' 'குடைநிழலும்.' 'சிவாஜியில்.' வெளி வந்தன. இவ்விரு சிறுகதைகள் எப்படி வெளியிடப்பட்டன என்பதை எம்.வி. வெங்கட்ராம் எழுதுகிறார்.

''ஒரு மழையில் வந்த கவிஞர் திருலோகத்திடம் 'எங்கிருந்து வருகிறீர்கள்? என்று கேட்டேன்.

'மதுரையிலிருந்து....'

'மதுரையிலிருந்து கும்பகோணமா - இந்த மழையில்.. உட்காருங்கள்..'

'உட்கார நேரம் இல்லை; மூன்றரை மணி ரயிலைப் பிடிக்க வேண்டும், புறப்படுங்கள்....'

'என்ன, ஏது என்று சொல்லாமல்...'

'நீங்களும் நானும் சிதம்பரம் போகிறோம். மௌனியிடமிருந்து கதை வாங்கிவர வேண்டும்.'

'இந்தப் பிரளய மழையில் சிதம்பரத்துக்கா?.'

'பிரளய கால மழையில் இரண்டு கவிஞர்கள் மௌனியின் கதை தேடிப் போனார்கள் என்று வரலாறு படைப்போமே!' என்றார் கவிஞர் நின்றபடியே.

'திருலோகம், முதலில் உட்காருங்கள். பிறகு வரலாறு படைப்போம். இந்தப் பேய் மழையில் கதை தேடி அலைய வேண்டாம். நாளைக்கே நான் மௌனிக்கு எழுதுகிறேன், இரண்டே நாளில் கதை வந்துவிடும்.'

'மௌனியின் கதையோடுதான் இந்த ஆண்டு தீபாவளி மலர் வெளிவர வேண்டும்.''

(என் இலக்கிய நண்பர்கள். எம்.வி. வெங்கட்ராம் பக். 87-88)

சிவாஜி ஆசிரியரான திருலோக சீதாராம் சிறந்த கவிஞர்; பாரதி பாடல்களை மிக அற்புதமாகப் பாடி அவற்றின் நுண்பொருளை விளக்குபவர். இவரின் சித்தார்த்தா என்ற மொழிபெயர்ப்பு, அதன் ஜெர்மன் மூலத்தை அதி அற்புதமாக தமிழில் கொண்டு வந்துள்ளது. இவர் இலக்கியத்திற்காகவே வாழ்ந்தவர்; சுமார் முப்பதாண்டுகள்

'சிவாஜி' என்ற பத்திரிகை நடத்தியவர். 'கரிச்சான் குஞ்சு', 'சேக்கிழார் அடிப்பொடி' தி.நா. இராமசந்திரன் போன்ற பெரிய இலக்கிய ஆர்வலர்களும் எழுத்தாளர்களும் இவரைத் தம் குருவாக ஏற்றுக் கொண்ட பெருமையுடையவர்.

மௌனியின் வாழ்க்கை, அமைதியாக போய்க்கொண்டிருந்தது. ஆங்கில எழுத்தாளர் டிகுவின்சி என்றொருவர் இருந்தார். அவரின் இலக்கிய நடை கொஞ்சம் செயற்கையாக இருந்தாலும், காம்பீர்யமாக, மிக அகன்ற இரு கரைகளுக்குமிடையே சுழன்று அடித்து ஓடும் பேராறுபோல் இருக்கும். 'டிகுவின்சியை' படித்த மௌனி இந்த அசாதாரண நடை எப்படி கைகூடியது என்று ஆராய்ந்தார். 'டிகுவின்சி' கஞ்சா பழக்கத்திற்கு அடிமையானார் என்றும் அந்த போதையில்தான் எழுதினார் என்றும் மௌனி அறிந்தார். முதலில் பரிசோதனையின் பொருட்டு கஞ்சா - அவரது மொழியில் 'லைக்கா' - உட்கொள்ளத் தொடங்கினார். அதனால் அதற்கு சில ஆண்டுகள் அடிமையானார். ஆனால் அவரால் டிகுவின்சி போல எழுத முடியவில்லை. பின்பு இந்தப் பழக்கத்தைவிட மிக வீர்யமுள்ள புகையிலையை அதிகமாக உட்கொள்ளத் தொடங்கினார்.

அவருக்கு நான்கு ஆண் பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறந்தார்கள். மகளை உரிய காலத்தில் மணம் முடித்துவிட்டார். மகன்கள் எல்லோருமே மிக நன்றாகவே படித்து உயர்ந்த பட்டம் பெற்றவர்கள்.

அவரின் முதல் மகன் எஞ்சீனியராக இருந்தார். அவருக்கு மணமாகி நான்கு ஆண்டுகளுக்குள் இரு குழந்தைகளுக்கு தந்தையாகிவிட்டார். ஐந்தாமாண்டு தொடக்கத்தில் சென்னையில் இரயில் அடியில் மாட்டிக்கொண்டு தன் முப்பத்திரெண்டாம் வயதில் இறந்து போய்விட்டார். முதல் மகனின் இறப்பு மௌனியை வெகுவாகப் பாதித்தாலும் அதை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை. அந்தப் புத்ர சோகத்தின் விளைவுதான் 'மனக்கோட்டை' கதையாயிற்று. இரண்டாவது மகன் வசந்தனுக்கு மணமானது. அவர் உளவியலில் எம்.ஏ. பட்டமும், பின்பு பி.எட் பட்டமும் வாங்கினவர். ஆறடிக்கு மேல் உயரம்; நெருப்பு சிவப்பாக ஆணழகன். அவருக்கு இரண்டு ஆண் குழந்தைகள் பிறந்தன. மணமாகி நான்காம் ஆண்டில் அவருக்கு சித்தப்பிரமை ஏற்பட்டு மனநோயாளியாக ஆகி விட்டார். மௌனி அவருக்காக ஏராளமான பணத்தை செலவழித்தார். பயனில்லாமல் போய்விட்டது. அவர்

வெறுமனே திண்ணையில் ஆடாமல் அசையாமல் மணிக்கணக்காக உட்கார்ந்திருப்பார். மௌனியைப் பார்க்க வருபவர்களை வெறித்து பார்த்துக் கொண்டிருப்பார். எவருடனும் பேசமாட்டார்; நான் மௌனியுடன் பழகத் தொடங்கியதால் 'மூக்குப்பொடி' மட்டும் என்னிடம் கேட்பார். அவரைப் பார்த்தால் அவருக்கு பைத்தியம் என்று சொல்ல முடியாதபடிக்கு இருப்பார். மௌனி, எந்த வேலை செய்து கொண்டிருந்தாலும் பார்வை அவர் மேலேயே இருக்கும். சிறிது நிமிடங்கள் பார்வையில் தட்டுப் படவில்லை என்றால் 'பையா...பையா' என்று கூப்பிட்டபடி ஆதங்கத்தோடு தேடுவார். இந்த துயரச் சம்பவங்களுக்குப் பிறகு தத்துவப் புத்தகங்களைப் படிப்பதில் மேலும் மேலும் ஆர்வம் கொண்டார். அவர் பல ஆண்டுகளாக இரண்டே இரண்டு புத்தகங்களை தன் பார்வையில் எப்போதும் படும்படியாக வைத்திருந்தார். பிராட்லியின் 'Appearance And Reality; பி.டி. ராஜுவின் Sankara And Bradely - A comparative Study. இவ்விரு புத்தகங்களை அடிக்கடி புரட்டிப் படிப்பார்; இவ்விரு நூல்களுமே மூளையைப் பிளக்கும் உள்ளடக்கங்களைக் கொண்டவை.

கேரள மாநிலத்திலுள்ள ஆலப்புழையில் 1959 இல் அகில இந்திய எழுத்தாளர் மாநாடு பெரியளவில் நடந்தது. அதை முன்னின்று நடத்தியவர்களில் முக்கியமான எழுத்தாளரும் 'சமீக்ஷா' காலாண்டு இதழின் ஆசிரியரும், கவிஞரும் கட்டுரையாசிரியருமான கோவிந்தனும் ஒருவர். இவர் சென்னையில் வாழ்ந்தவர். இவரின் நெருங்கிய நண்பர் க.நா.சு. இவர்களிருவரும் ஐம்பதுகளிலிருந்து எழுபதுகள்வரை சென்னையில் இலக்கிய கூட்டங்களை நடத்தி வந்தார்கள். கோவிந்தனைச் சுற்றி எப்போதும் இளம் எழுத்தாளர்களும், ஓவியர்களும், கவிஞர்களும் இருப்பார்கள். இவரை நாங்கள் சாக்ரடீஸ் என்போம். அவர் எம்.என்.ராயின் தத்துவங்களை ஏற்றுக்கொண்டவர். மொழி, சாதி எல்லாவற்றையும் கடந்த, மிகமிக அற்புதமான மனித நேயமிக்கவர். சுந்தரராமசாமி இவரை தன் ஆதர்சபுருஷராக ஏற்றுக்கொண்டதாக எழுதியும் இருக்கிறார். க.நா.சுவின் வற்புறுத்தலின்பேரில்தான் மௌனி, சிதம்பரத்தை விட்டு வெளிவந்து அந்தமாநாட்டில் கலந்து கொண்டார். மௌனியிடம் கோவிந்தனுக்கு பெருமதிப்பு உண்டு. மலையாள வாசகர்களுக்கு மௌனியை அறிமுகப்படுத்தியது கோவிந்தன்தான். அந்த மாநாட்டையொட்டிதான் க.நா.சு. மௌனி எழுதிய கதைகளை தேடிக்கண்டுபிடித்து 'அழியாச்சுடர்' என்ற பெயரில் ஒரு தொகுதியை வெளியிட்டார். அந்தத் தொகுப்பின்

முன்னுரையில் இப்படிச் சொல்லியிருக்கிறார். ''தமிழர்கள் பாக்கியசாலிகள். ஆனால் தங்கள் பாக்கியத்தைத் தெரிந்து கொள்ளத்தான் அவர்களுக்குத் தன்மையோ அறிவோ போதுமான அளவில் இல்லை. ஆகவே 1935 இல் மௌனி எழுதிய சிறுகதைகள் 1959 ல் வெளி வருகின்றன.''

''மௌனியும் பாக்கியசாலிதான். அவர் இருபத்திநான்கு வருஷங்களுக்கு முன் எழுதிய கதைகள் இப்போதாவது வெளி வருகின்றனவே''(அழியாச்சுடர் முன்னுரை.க.நா.சுப்ரமணியம்) அந்தத் தொகுதியில் மூன்று கதைகள் இடம் பெறவில்லை. ஏனெனில் அவை அப்போது கிடைக்கவில்லை. அந்தக் கதைகள் கண்டு பிடிக்கப்பட்டு, அவை பீகாக் பதிப்பகம் அவரின் அறுபதாண்டு நிறைவு விழாவை யொட்டி வெளியிட்ட பதிப்பில் (1967) சேர்க்கப்பட்டன. 'அழியாச்சுடர்' 1959இல் வந்த பிறகுதான் மௌனியின் பின் தலைமுறைக்கு அவரின் சிறுகதைகளைப் படிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. இந்நூல் வெளிவரும் வரை மௌனி என்ற ஒரு எழுத்தாளர் இருக்கிறாரா இருந்தாரா என்ற ஐயப்பாடு இலக்கியவுலகில் நிலவிவந்ததும் உண்மை. அந்த மாநாட்டிற்கு மௌனி சென்றதால் அவரின் நெருங்கிய நண்பர்களாகிய சுந்தரராமசாமி, கிருஷ்ணன் நம்பி, நகுலன் போன்றோர் அம்மாநாட்டிற்குப் பிறகு மௌனியைச் சிதம்பரத்தில் பார்க்கும் பழக்கத்தை ஏற்படுத்திக்கொண்டார்கள். நகுலன் சிறுகதைகள், புதுக்கவிதை, மொழிபெயர்ப்புகளைக் கொண்ட 'குருக்ஷேத்திரம்' என்ற தொகுப்பை 1968இல் கொண்டுவந்தார். இந்தத் தொகுப்பில்தான் மௌனியின் 'அத்துவான வெளி' 'உறவு, பந்தம், பாசம்' என்ற இரு சிறுகதைகள் வெளியிடப்பட்டன. அதற்குப் பிறகு 'கசடதபற'வில் 1971ல் 'தவறு' என்ற அவரின் கடைசிச் சிறுகதை வெளியிடப்பட்டது.

மௌனியின் அறுபதாண்டு நிறைவு விழாவைச் சென்னையில் கொண்டாட அன்றைய இளம் எழுத்தாளர்களான நா. முத்துசாமி, தருமு சிவராமு, வைத்தீஸ்வரன் மற்றும் நானும் திட்டமிட்டோம். அவ்விழாவையொட்டி மௌனியின் சிறுகதைகள் அடங்கிய ஒரு தொகுதியை வெளியிட்டேன். அவ்விழா சென்னையில் மணிக்கொடி கு.சீனிவாசன் தலைமையில் ஹோட்டல் சுவாகத்தில் கொண்டாடப்பட்டது. அக்கூட்டத்தில் சிட்டி' பெ.கோ. சுந்தரராஜன், கஸ்தூரி ரங்கன். சி.சு.செல்லப்பா, பேசினார்கள். மௌனியையும் சிதம்பரத்திலிருந்து அழைத்து வந்தேன். அவர் அதிகம் பேசவில்லை. 'எனக்கு இப்படி கூட்டம் நடக்கும் என்று நான் கற்பனைக்கூட

செய்ததில்லை' என்று தன் நன்றியறிதலைச் சொன்னார். 'மௌனி - கதைகள்' . தொகுதிக்கு க.நா.சுப்ரமண்யம், தருமு சிவராமு ஆகியவர்களின் கட்டுரைகள் முன்னுரைகளாகச் சேர்க்கப்பட்டன. இதன்பிறகுதான் சீறிலங்காக்காரரான தருமு சிவராமு முதலில் சிதம்பரத்திலும் பின்பு சென்னையிலுமாக இந்தியாவில் நிரந்தரமாகக் குடியேறினார். அவர் சட்டப்படி வராததினால் தருமு சிவராமுவின் வாழ்க்கைச் செலவை மௌனி இரண்டாண்டு காலத்திற்கு ஏற்றுக்கொண்டார். அவர் இங்கு நடந்துகொண்ட விதத்தால் மௌனிக்கு பிரச்சனைகளும் சங்கடங்களும் ஏற்பட்டன. ஆதலால் மௌனியிடம் பிணக்குக் கொண்டு சிதம்பரத்திலிருந்து வெளியேறி சென்னையில் குடியேறினார். ஆனாலும் மௌனியின் இலக்கிய மேதைமையை அன்றையை இளம் எழுத்தாளர்களிடமும் இலங்கை தமிழ் வாசகர்களிடயேயும் எடுத்துச் சொல்லி புகழ் சேர்த்ததில் க.நா.சுவுக்கு அடுத்தபடியாக தருமு சிவராமுக்கு பங்கு உண்டு.

1967லிருந்து சிதம்பரத்திற்கு மௌனியைச் சந்திப்பதற்கும் பேட்டி காண்பதற்கும் இலக்கிய ஆர்வலர்களும் எழுத்தாளர்களும் போகத் தொடங்கினார்கள். 1967லிருந்து நா.முத்துசாமியும் நானும் மாதத்திற்கு ஒரு தடவையாவது மௌனியை சிதம்பரத்தில் சந்திப்போம். ஒரு காலம் வரை அவரை க்ரியா ராமகிருஷ்ணன், வெங்கட்சாமிநாதன், பல தடவைகள் சந்தித்ததுண்டு. ஆனால் ஆண்டுகள் ஆகஆக நான் மட்டுமே போய்ப் பார்ப்பேன். இந்தப் புதிய நண்பர்களுடன் பழக்கம் ஏற்பட்டதால் அவரின் புத்ரசோகம் கொஞ்சம் தணிந்தது என்றும் சொல்லலாம்.

அமெரிக்க தூதரகத்தின் சென்னைப் பிரிவில் தலைமை அதிகாரியாக ஆல்பர்ட் ஃப்ராங்ளின் என்பவர் பணிபுரிந்துவந்தார். அவர் உலகத்தின் பல நாடுகளில் பணி நிமித்தமாக இருந்தவர். ஆக இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு பலமொழிகளைக் கற்றிருந்தார். அவர் தமிழ் மொழி பயின்று கம்பராமாயணத்தைப் படித்து புலமைபெற்றார். அவர் சென்னையில் வெளிவந்த தமிழ் சிற்றேடுகளைத் தேடிப்பிடித்து தற்காலத் தமிழ் இலக்கியத்தையும் நன்றாக அறிந்துகொண்டிருந்தார். அவருக்கு மௌனியும், நா.முத்துசாமியும் பிடித்துபோயிருந்தது. மௌனியின் சிறுகதைகளை ஆழ்ந்து படிக்கத் தொடங்கி அவரின் பரம ரசிகரானார். சிதம்பரத் திற்குச் சென்று மௌனியைப் பார்த்தார். உலகத்தின் தலைசிறந்த சிறுகதையாசிரியர்களில் மௌனியும் ஒருவர் என்று ஃபிராங்ளின் மதிக்கத் தொடங்கியதால் அவரின் கதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். அமெரிக்காவின் பெரிய பத்திரிகைகளில் மௌனியின்

கதைகளை வெளியிட முயன்றார். ஃப்ராங்ளினுக்கும் மௌனிக்கும் ஆழ்ந்த நட்பு ஏற்பட்டது. சென்னையிலிருக்கும் போதுதான் அவர் பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். தன் தாய்நாடு திரும்பியதும் பல் கலைக் கழகத்தில் தமிழ் கற்றுத் தரும் பேராசிரியராக வேலை பார்த்தார். அப்போது அமெரிக்காவின் பல்கலைக்கழக இலக்கிய வட்டாரங்களில் மௌனியை அறிமுகப்படுத்துவதை தன்னுடைய தார்மீக கடமையாகக் கொண்டு செயல்பட்டார். இந்தியாவிற்கு வரும்போதெல்லாம் மௌனியைப் பார்க்காமல் திரும்ப மாட்டார். மௌனியிடம் கடிதத் தொடர்பும் வைத்திருந்தார். மௌனியை இலக்கிய நண்பர்கள் பார்ப்பதும், ஃபராங்ளின் போன்றவர்களின் வருகையும் அவரின் புத்திர சோகத்தை மறக்கும்படி செய்தன.

சிதம்பரத்தில் மௌனி தன்னைப் பார்க்கவருபவர்களை மிகவும் அன்பாக வரவேற்பார். அவர் நடுத்தர உயரம் சட்டை அணியாதவர். மிகவும் ஒல்லியானவர். ஒட்டிப் போன வயிறு; அடர்த்தியாக எம்பி நிற்கும் தும்பை பூ போன்று நரைத்த தலைமுடி. நீண்டமூக்கும், கரிய கண்களுமாக, சதையில் செதுக்குண்ட கிரேக்க சிலைபோல காட்சி யளிப்பவர். நெற்றியில் பளீரென்று எப்போதும் இருக்கும் பட்டையான திருநீறு; வெற்றிலையும் புகையிலையும் எப்போதும் குதப்பிக் கொண்டே இருக்கும் வாயில் கருப்பேறிய பற்கள். இதுதான் மௌனியின் புறத்தோற்றம். இருபதாண்டுகால நட்பில் அவர் எனக்கு எழுதிய கடிதங்கள் நூற்றுக்கும்மேலே என்னிடம் இருக்கின்றன. தனது மரணத்தை உள்ளுணர்வால் உணர்ந்ததும், என்னை சிதம்பரத்திற்கு வரவழைத்து பிறர் தனக்கு எழுதிய கடிதங்களை அவர் என்னிடம் ஒப்படைத்துவிட்டார். மௌனி தான் எழுதும் பழக்கத்தை தொடங்கிய காலத்திலிருந்து தடிமனான நோட்டு புத்தகங்களில் தன் மனத்தில் தோன்றுவதையும், சிறுகதைகளையும் எழுதிவைப்பார். அவற்றையும் என்னிடம் கொடுத்துவிட்டார். கடிதங்களையும் நோட்டு புத்தகங் களையும் சேர்த்து ஒரு பெரிய புத்தகமாக வெளியிடலாம். ஓர் இலக்கியப் படைப்பாளியின் ஆக்கச் செயல்பாட்டை புரிந்துகொள்ள இவை உதவும். மேலைநாடுகளில் இலக்கிய படைப்பாளிகள் விட்டுச் சென்ற கையெழுத்துப் பிரதிகளை வெளியிடுவது மரபாக இருக்கிறது. அந்த மரபை தமிழ்நாட்டில் தொடங்குவது தமிழ் இலக்கியத்திற்கு மிகுந்த பயனைத் தரும். மேலும் மேலை நாட்டு எழுத்தாளர்களின் வரலாறுகள் நம்பத்தகுந்த ஆதாரங்களைக் கொண்டு எழுதப் படுகின்றன. அவர் தன் வாழ்க்கையைப்பற்றி என்னிடம் நிறையவே கூறி இருக்கிறார். அவற்றை எல்லாம், ''மௌனியுடன் இருபதாண்டுகள்'' என்ற என் புத்தகத்தில் வெளியிடஉள்ளேன்.

மௌனி தன் சிறுகதைகளைப்பற்றி மட்டுமே ஓயாமல் பேசுவார். அவருக்கு அப்படிப் பேசுவதில் சலிப்பே ஏற்படாது. அவர் சிறுகதைகளில் கதையம்சம் என்பது மிகக் குறைவு. ஆக அவர் பேசுவதெல்லாம் தன் கதைகளில் வரும் மிக முக்கியமான வாக்கியங்களை வைத்துக்கொண்டு அவற்றுக்குப் பின்னால் மறைந்திருக்கும் தத்துவ பின்னணியை தான் பேசுவார். அவருக்கு 'காலம்' 'வெளி' என்ற இரு கருதுக்கோள்களிலும் வெறி என்றே சொல்ல வேண்டும். காலம் என்றால் என்ன? வெளி என்றால் என்ன? இவற்றின் இறுதியான மெய்ம்மைகளை அறிந்து கொண்டால் இந்தப் பிரபஞ்சத்தையும் அதில் எங்கோ ஓரிடத்தில் புள்ளியாக இருக்கும் மனிதனைப் பற்றியும் தெரிந்து கொள்ளலாம். அநேகமாக அவரின் சிறுகதைகள் இவ்விரண்டை நோக்கித்தான் பயணம் செல்கின்றன. அதனால்தான் இலக்கியத்தில் - சிறுகதைகளில்- கதை தேடுபவர்களுக்கு மௌனியிடம் சலிப்பு ஏற்பட்டு, புரியவில்லை என்று போய் விடுகிறார்கள்.

மௌனி தன் சிறுகதைகளைப் பற்றிப் பேசினால் அவை நேற்றுதான் எழுதப்பட்டவை போன்று ஒரு பிரமை கேட்பவரின் மனத்தில் எழும். ஆனால் அவை சுமார் இருபது அல்லது முப்பதாண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டவையாக இருக்கும். எழுதுவது என்பது 'வேதனை மிக்க அனுபவமாக இருக்கும் உடலுக்குப் பெரும் ஆயாசப் படுத்தும் வேலை' என்பார். ஏனெனில் ஒவ்வொரு சொற்றொடரையும் திரும்பத் திரும்ப தன் மூளையில் இரவுபகலாக எழுதிப்பார்த்துவிட்டு பின்புதான் காகிதத்தின்மேலே எழுதுவார். அப்படியும் அவருக்கு திருப்தி ஏற்படாது. சொற்களை இடம் மாற்றிப் போடுவார். சரியான சொற்களை அவர் மூளை தேடுவதில் ஈடுபட்டிருக்கும். 'மூளையை கசக்கிப் பிழிகிற வேலை' என்று பல தடவைகள் என்னிடம் சொல்லியிருக்கிறார். 'நான் கவிஞன்' என்பார். மௌனி தன் சிறுகதைகளைப் பற்றி பேசினாலும், மற்றவர்களின் கதைகளையும் படித்திருப்பார். ஒரு தடவை அவர் கையில் ஆனந்தவிகடன் இருப்பதைப் பார்த்தேன். நான் கேட்டேன். ''நீங்களும் ஆனந்த விகடன், குமுதம், படிக்கிறீர்களா?'' ''ஏன்? படிக்கக்கூடாது என்கிறீர்களா?'' அந்த ஆனந்தவிகடனிலுள்ள தான் படித்து முடித்த சிறுகதையைக் காட்டி ''யாருன்னு தெரியல ஆசிரியர். பொம்மனாட்டியா இருக்கும்போல தெரியுது. கதையைப் படிச்சேன். கண்ணிலே நீர் வந்துடுத்து'' என்று சொல்லிவிட்டு. ''நான் யார் எழுதியிருக்கான் என்று பார்த்துவிட்டுத்தான் படிக்க மாட்டேன்... படிப்பேன். அழ வைக்கிறது இலக்கியம் கிடையாது. இந்தக் கதை

என் கண்ணிலே நீரை வரவழைச்சுட்டுது. அதனால் இந்தக் கதை உசத்தி என்று சொல்ல மாட்டேன்.'' மௌனி இறப்பதற்கு ஆறு மாதங்களுக்கு முன்பு 'மௌனியுடன் ஒருநாள்' என்ற ஒரு ஆவணப்படம் (டாக்குமெண்ட்ரி) எடுத்தேன். அப்போது மௌனியிடம் தமிழ் இலக்கியப் படைப்பாளிகளைப் பற்றி கேட்டேன். அவற்றிற்கெல்லாம் ஆணித்தரமாக விடைகொடுத்தார். நான்தான் முதன் முதலாக மௌனியுடன் நேர்காணல் செய்தேன். இந்தப் பேட்டி நா. பார்த்தசாரதி நடத்தி வந்த தீபத்திற்காக 1967ல் எடுக்கப் பட்டது. இந்தப் பேட்டி 'தீபம்', அக்டோபர் 1967 இதழில் வெளியிடப்பட்டது. மௌனியை பேட்டி காண்பது என்பது பெரும்பாடாகும். பொதுவாகவே மௌனியிடம் உரையாடுவது என்பது அவ்வளவு சுலபம் இல்லை. ஏனெனில் அவருடன் உரையாடும்போது அவர் பேச்சு தொடர்பு இல்லாமல் தாவித்தாவிப் போவதாக இருக்கும். சங்கீதத்திலிருந்து அன்றைய இலக்கியக் கோட்பாடுகள்வரை மௌனி படித்திருந்ததால் அவற்றின் சாராம்சங்கள் மிக இயல்பாக அவர் பேச்சில் நுழைந்துவிடும். அவர் அறிவுக் கூர்மையுள்ளவர். அவர் புத்தகங்களைப் படிக்கும் முறையிலேயே எப்படிப்பட்ட மூளை அவருடையது என்பதை அனுமானித்து விடலாம். சில புத்தகங்களை விருவிருவென்று படித்து முடிப்பார். ஏன் என்று ஒரு தடவை கேட்டபோது சொன்னார், ''இவர் நான் சிந்தித்ததைத்தான் எழுதியிருக்கிறார்'' எனறார். சில புத்தகங்களை ஆண்டுக் கணக்கில் மீண்டும் மீண்டும் படித்ததைப் பார்த்திருக்கிறேன். அவர் சுவாமி கம்பீரானந்தாவின் ஆங்கில மொழிபெயர்ப்பான 'எட்டு உபநிடதங்கள்' என்ற நூலை புரட்டிக் கொண்டேயிருப்பார். படிப்பார்; மூடிவிடுவார்; யோசிப்பார். மீண்டும் எடுப்பார், வலது கையில் பூதக் கண்ணாடியை வைத்துக்கொண்டு படிப்பார். பின்பு எங்கோ வெறித்துப் பார்த்தபடி அவர் பார்வை இருக்கும். அவர் மேசையில் இருக்கும், திரும்பத் திரும்ப படிக்கும் புத்தகங்களில் மிகவும் பழைமையான கந்தலாகி ஏடுகள் பிய்ந்து போன பைபிள் ஒன்றும் இருந்தது. நான் புதிய பைபிள் வாங்கிக் கொண்டு வருகிறேன் என்று பல தடவைகள் சொன்ன போதிலும் 'எனக்கு வேண்டியதில்லை' என மறுத்துவிட்டார். அவர் தன் புத்தகங்களின் பக்கங்களிலுள்ள காலியான இடங்களில் பென்சிலால் தன் கருத்துகளை எழுதி வைப்பார். அவ்வப்போது படிப்பார். நான் சந்திக்கும்போதெல்லாம், தான் எழுதியவற்றைப் படித்துக் காட்டுவார். ''இவற்றையெல்லாம் தொகுத்து ஒரு புத்தகமாக போடலாமே'' என்பேன். ''ஏன்?'' என்று கேட்டார். ''நீங்கள் இலக்கியச் சாதனை புரிந்துவிட்டீர்கள் ஆனால்

அவை அளவில் குறைவானதென்று திறனாய்வாளர்கள் கருதுகிறார்கள். அதனால் இவற்றை புத்தகமாகப் போடலாம்.'' ''மூன்று நான்கு பெத்துவிட்டால் போதாதா? திருதிராஷ்டிரன் மாதிரி நூறு பெத்துகிட்டாதான் ஆண்மை உள்ளவன்னு அர்த்தமா?' என்று எதிர் கேள்விப் போட்டார். பைபிளுக்கு பல ஆங்கில மொழிப்பெயர்ப்புகள் இருந்தபோதிலும் மௌனி 'கிங் ஜேம்ஸ்' இங்கிலீஷ் மொழிப் பெயர்ப்புதான் படித்தார். ஏசுவைப் பற்றி ஒரு சிறுகதை எழுத வேண்டும் என பல ஆண்டுகளாக என்னிடம் சொல்லி வந்தார். ''ஏசு சிலுவையைத் தன் முதுகின்மேல் சுமந்து கொண்டு போகிறார். தன் பிணத்தைத் தானே சுமந்துகொண்டு போவதுபோன்ற உணர்ச்சி! அப்படிப் போகும்போது சிலுவையின் பளு தாங்க முடியாமல் ஒன்பது இடங்களில் சற்று ஒய்வு எடுத்து போகிறார். அப்போது அவர் மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்தபடி இருக்கின்றன. ஏசு சிலுவையில் அறையப்பட்டு இறக்கும் தருவாயில் சொன்ன வார்த்தைகள் 'கடவுளே என்னை ஏன் கைவிட்டீர்கள்?' அப்படியென்றால் அவர் தன்னை சாதாரண மனிதனாகத்தான் எண்ணினார். கிறித்துவ மதத்தை நிறுவிய பவுல்தான் அவரை தேவ மைந்தனாக ஆக்கிவிட்டார். சரி அது போகட்டும். அவரின் இறுதி எண்ணங்கள்தான் என்ன? அவைதான் என் சிறுகதை'' என்றார். பல தடவைகள் முயற்சி செய்தார். அப்படி முயற்சி செய்தபின் எழுதிய முதல் இரண்டு பக்கங்களை என்னிடம் படித்துக் காட்டினார். அதை அவரிடமிருந்து நான் வாங்கிக்கொள்ள எவ்வளவோ முயற்சி செய்தேன். என்னிடம் கொடுக்க மறுத்து கிழித்துப் போட்டுவிட்டார். காரணம் கேட்டதற்கு அது சரியாக வரவில்லை என்றுதான் பதிலளித்தார்.

சிதம்பரம் வீரராகவன் தெருவில் சொந்தமாக வீடு கட்டிக் கொண்டு போவதற்கு முன்பு தெற்கு ரத வீதியில் பல ஆண்டுகள் மௌனி குடியிருந்தார். அந்த வீட்டில் இருக்கும்போதுதான் அவரது இரண்டாவது மகன் வசந்தனுக்கு பைத்தியம் பிடித்தது. அது நாலுகட்டு வீடு. அந்த நீண்ட பெரிய வீட்டில் மௌனி, அவரது மனைவி, வசந்தன் மூன்று பேர்கள் மட்டுமே இருந்தனர். அந்த வீட்டில்தான் மௌனியை முதன் முதலாகச் சந்தித்தேன். புழக்கடையில் மரங்கள் நிறைய இருந்தன. இங்கேதான் அதிக நேரத்தைக் கழிப்பதாகச் சொன்னார். பல காரணங்களினால் நண்பர்கள் அவரைப் பின்னாளில் பார்க்க முடியாமல் போனாலும் நான் மட்டும் அடிக்கடி போய் பார்த்து வருவேன். அவர் வீட்டில்தான் தங்கியிருப்பேன். அவர் இரவு ஒரு மணி வரைக்கும் பேசிக்

கொண்டிருப்பார். விடியற்காலையில் ஐந்துமணிக்கே தூங்கிக் கொண்டிருக்கும் என்னை எழுப்பிவிடுவார். ஒரு தடவை நான் சொன்ன நாளன்று சிதம்பரம் போகாமல் மறுநாள் காலையில் போனேன். வந்தவுடன் வரவேற்கும் பழக்கமுடைய மௌனி அன்று காலை முகம்கொடுத்துப் பேசவில்லை. அப்படி பழக்கம் இல்லாதவர் அவர். எனக்கு சங்கடமாகி விட்டது. விருந்தும் மருந்தும் மூன்று நாள்கள்தான் என்பார்களே, அப்படித்தான் ஆகிவிட்டதோ என்று எண்ணினேன். அவர் மௌனமாக இருந்துவிட்டு திடீர் திடீரென்றுதான் பேசுவார். "சச்சிதானந்தம்....சொன்ன தேதிக்கு வந்துவிட வேண்டும் தெரியுதோ. நேத்திக்கே வர்ரேன்னு சொன்னே. நீ வர்லை. எனக்கு தூக்கமே போச்சு...." என்று சொல்லிவிட்டு கொஞ்ச நேரம் மௌனமாக இருந்துவிட்டு முடித்தார். "நீ வர்லையேன்னு.... ஏதாவது உனக்கு ஆபத்து வந்து விட்டதோ.... ? என் கற்பனை விபரீதமாக ஓட ஆரம்பித்துவிட்டது. உனக்குதான் தெரியுமே என் முதல் மகன் ரயிலில் அகப்பட்டுக் கொண்டு செத்தபோது..." என்று சொன்னார். இப்படி விபரீதமாக கற்பனை செய்து கொள்வார் . ஆக நான் சொல்லாமல் கொள்ளாமல் அவர் வீட்டுக்குப் போகும் பழக்கத்தை ஏற்படுத்திக்கொண்டேன்.

மௌனிக்குக் கர்நாடக சங்கீதத்தில் மிகுந்த ஈடுபாடு உண்டு. வயது ஐம்பதுக்கும் மேல் ஆன மௌனி சங்கீத வாத்தியார் முன்பு பவ்யமாக அமர்ந்துகொண்டு பிடில் கற்றுக்கொள்வதைப் பார்க்கும் போது அது ஒரு விநோதமான காட்சியாக இருக்கும். ஏனென்றால் வாத்தியாரைவிட சீடருக்கு வயது அதிகம். மௌனிக்கு, தேவதாசி களிடம் நிறைய தொடர்பு இருந்தது. ஆனால் ஒரு தடவை கூட அவர் தேவதாசிகளைப் பற்றி இழிவாகப் பேசியது கிடையாது. "தேவதாசிகள் பலருக்கு சங்கீத ஞானம் உண்டு. இப்போது சொல்லப்படும் பரதநாட்டியம் என்ற சதிராட்டம் பற்றிய நுணுக்கங்களை எல்லாம் நன்கறிந்தவர்கள். அவை அவர்களின் இரத்தத்தில் ஊறிப்போனவை. ஒரு தேவதாசி ஒருவனுடன் தான் இருப்பாள். அவனே விலகிப் போய்விட்டாலோ அல்லது இறந்து விட்டாலோ வேறொருவனை ஏற்றுக் கொள்ளாத தேவதாசியும் உண்டு. இப்படிப்பட்ட தேவதாசிகளை நான் நன்கறிவேன். பிற்காலத் தில்தான் தேவதாசிமுறை கேவலமாக ஆகி விட்டது" என்று சொல்வார். வசதியான தேவதாசி என்றால் அவள் வீட்டில் சங்கீத கச்சேரிகள், நடக்கும். சதிராட்டம் நடக்கும். அதில் சங்கீத பாகவதர்கள் இசை ஞானமுள்ள இரசிகர்கள் கலந்து கொள்வதுண்டு.

மௌனி நேரில் பார்ப்பதற்கு மிகுந்த ஆசார சீலராகவும், பக்திமானாகவும் தோற்றமளிப்பார். அவருடன் பல தடவைகள் சிதம்பரம் நடராசர் கோயிலுக்குப் போயிருக்கிறேன். அவர் எப்போதுமே மிக வேகமாக நடப்பார். கோயிலின் பிரகாரத்திற்குள் மௌனி நடக்கத்தொடங்கினால் அவர் பின்னால் நான் ஓடும்படி செய்துவிடுவார். ஒரு தடவை கூட அவர் தன் இருகை கூப்பி வணங்கி நான் பார்த்ததே இல்லை. எனக்கு இது புதிராகவே இருக்கும். நான் கேட்டேன் '' ஏன் நீங்கள் கையெடுத்துக் கும்பிடுவதில்லை. உங்களைச் சந்திக்க வரும் போதெல்லாம் கோயிலுக்கு என்னை அழைத்து வருகிறீர்கள். கருவறையை - எட்டிப் பார்ப்பதோடு நின்றுவிடுகிறீர்கள்!!'' அதற்கு மௌனமாக இருந்துவிட்டுச் சொன்னார், ''அத்வைதிக்கு கோயிலே வேண்டியதில்லை. '' மக்கள் கொண்டாடும் மகான்களை அவர் வழிபட்டதே கிடையாது. அவர் வீட்டில் எந்த சாமி படங்களும் கிடையாது. மௌனியை ஒருதடவை கேட்டேன் ''ரமண மகரிஷியைப் பார்த்திருக்கிறீர்களா?'' என்று. ஏனென்றால் அவர் ரமணரின் சமகாலத்தவர்; வாழ்ந்த காலத்திலேயே பேரும் புகழும் பெற்றவர். ''திருவண்ணாமலைக்கு போயிருக்கிறேன். ரமணரைப் பார்த்திருக்கிறேன். ஆனால் மகரிஷியை பார்த்ததில்லை'' என்றார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் ஆங்கில இலக்கியத்தில் எம்.ஏ.பட்டம் பெற்ற மாணவர் ஒருவர் அடிக்கடி மௌனியைச் சந்திப்பது வழக்கம். அவரோ அரவிந்தரின் தீவிர பக்தர். ஒரு தடவை அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருக்கும்போது நானும் உடனிருந்தேன். மௌனி என்னை அந்தமாணவரிடம் அறிமுகப்படுத்தி வைத்தார். ''இவர்தானப்பா, அரவிந்தர் எழுதிய காவியமான.....'' என்று நிறுத்திவிட்டு அந்த மாணவனை நோக்கிக் கேட்டார். ''காவியத்தின் பெயர் கோமளம். அதுதானே?'' என் காதில் கோமளம் என்ற பெயர் விழுந்தவுடன் என்னையும் அறியாமல் சிரித்து விட்டேன். ஏனென்றால் மௌனிக்கும் எனக்கும் அரவிந்தரின் காவியத்தின் பெயர் 'சாவித்திரி' என்பது நன்றாகவே தெரியும். இவர் வேண்டுமென்றே சொல்வதும் எனக்கு புரிந்தது. நான் சிரிப்பதற்கு வேறொரு காரணமும் இருந்தது. அந்த மாணவன் முகம் சினத்தினால் சிவந்துபோய் உரக்கவே கத்திவிட்டான். 'எத்தனை தடவை உங்களுக்கு சொல்லியிருக்கிறேன். சாவித்திரி சாவித்திரி என்று'' சொல்லிவிட்டு அறையை விட்டு வெளியே விர்ரென்று போய்விட்டான். பின்பு நான் அவனைத் தற்செயலாகச் சந்தித்தபோது ''ஏன் அப்படி சிரித்தீர்கள்'' என்று கேட்டான். நான் பதிலொன்றும் சொல்லாமல் மழுப்பி, வேறு

விஷயத்தைப் பேச வைத்தேன். மௌனி கோமளம் என்ற அந்தப் பெயரை ஏன் சொன்னார் என்பதை அதிதீவிர அரவிந்தரின் பக்தரிடம் சொன்னால் அவர் மனம் புண்படும் என்பதினால் நான் சொல்ல வில்லை. 'கோமளம்' மௌனிக்குத் தெரிந்த தேவதாசியின் பெயர். இவர் புகழ்பெற்ற பந்தநல்லூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையிடம் பரத நாட்டியம் பயின்றவர் என என்னிடம் சொல்லியிருக்கிறார். பந்த நல்லூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை என்ற பெயரைச் சொன்னால் மௌனி மெய்மறந்து பேசாமல் சில நிமிடங்கள் அப்படியே கல்லாய் சமைந்து போனதைப் பார்த்திருக்கிறேன். பிற்காலத்தில் பரத நாட்டியத்தில் உலகப்புகழ் ஈட்டிய இந்திராணி ரக்மான், தமயந்தி ஜோஷி போன்றவர்கள் குருகுல முறைப்படி பல ஆண்டுகள் போக்குவரத்து வசதி இல்லாத குக்கிராமமான பந்தநல்லூரில் அவரிடம் பரதநாட்டியம் பயின்றவர்கள். அவரை மௌனி சந்தித்துப் பேசி இருப்பதையும் அடிக்கடி சொல்லியிருக்கிறார்.

ஒரு தடவை மௌனியுடன் நான் இருந்த போது ஒருவர் காலம்சென்ற காஞ்சி பெரியவாளைப்பற்றி மிகுந்த பயபக்தியுடன் சொல்லிக்கொண்டிருந்தார். ஆனால் மௌனியோ அவர் சொல்லிக் கொண்டிருப்பதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் அடிக்கடி அறையிலிருந்து வெளியே போய் தன் வாயிலிருந்த வெற்றிலை எச்சிலைத் துப்பிக் கொண்டு வந்தார். அவரோ உணர்ச்சி வயப் பெற்று அப்போது பெரியவர் இருக்கும் திக்கை நோக்கி கையெடுத்து கும்பிட்டுவிட்டுச் சொன்னார், "நீங்கள் அவரை ஒரு தடவையாவது தரிசித்து வரவேண்டும்". மௌனி சொன்னார், "இது பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்ததாகும். எங்க ஊரிலே ஒருவர் இருந்தார். அவரோ மகா கிறுக்கன் என்ற பெயர் பெற்றவர். அத்வைத நூல்களையெல்லாம் கரைத்துக் குடித்தவர் பிராம்மணர்தான். பூனூல் போட்டது இல்லை. திருநீறு இட்டதில்லை. சமஸ்கிருதத்திலேயே பேசுவார். கோயிலுக்கு போகிறவரை கூப்பிட்டு '"ஏண்டா கோயிலுக்கு போகிறே. நீ உண்மையான அத்வைதி என்றால் கோயில், குளம் இதெல்லாம் கிடையாது." என்பார். அவரைக் கண்டாலே சமஸ்கிருதத்தில் சிரோன்மணி, பண்டிதர், வேதவித்துகள் எல்லோருமே ஓடி ஒளிந்து கொள்வார்கள். வியாக்கரணம் படித்தவர். தர்க்கம் படித்தவர். அப்பேர்பட்ட அசாத்தியமான படிப்பு. அந்தக் காலத்தில் காஞ்சிப் பெரியவர் கால்நடையாகவே பல ஊர்களுக்குப் பயணம் செய்வார். ஆங்காங்கே வித்வத் சபை கூட்டுவார். அது பல நாள்கள் நடக்கும். அப்படியொரு சபையை எங்க ஊரில் கூட்டினார். இந்த சபைக்கு அந்த 'மகாகிறுக்கரை' அழைப்பதில்லை என்று ஒரு

மனதாக முடிவெடுத்தார்கள், அந்த ஊர் பிராமணர்கள். ஏனென்றால் இந்த 'மகா கிறுக்கு' காஞ்சி பெரியவரை கடுமையாக விமர்சித்து வந்தாராம். திட்டமிட்டபடியே அந்த வித்வத் சபை நடந்து கொண்டிருந்தது. திடீரென்று 'கிறுக்கர்' அந்தச் சபையில் நுழைந்து, சமஸ்கிருதத்திலேயே சரளமாகப் பேசத் தொடங்கியதும் எவராலும் மேலும் பேசமுடியவில்லை. இரண்டாம் நாளே காஞ்சிப் பெரியவர் வித்வச் சபைக்கு வராமல் வேறு ஊருக்குப் போய்விட்டார்."

எனக்குத் தெரிந்தவரை மௌனி ஒரே ஒருவரைத்தான் மிகுந்த மரியாதையுடன் பேசியதுண்டு. ஆதி சங்கரரைப் பற்றி மௌனிக்கு மிகுந்த உயர்வான எண்ணம். அதாவது அவரது அத்வைத சித்தாந்தம் மௌனிக்கு ஏற்புடையதாக இருந்தது. மௌனிக்கு சடங்குகளில் நம்பிக்கை இல்லாதிருந்தாலும் அவற்றைச் செய்தார். ஏன் என கேட்டதற்கு பதில் சொன்னார். "நான் என்ன தனியாகவா காட்டிலே வாழ்கிறேன். வீட்டிலேதானே வாழ்கிறேன். அவர்கள் நம்பும்போது நான் என்ன செய்ய முடியும்? அவர்களின் மன அமைதியை நான் ஏன் குலைக்க வேண்டும்?"

இலக்கியத்தின் மூலமாக தான் இறவாமை பெற்றுவிட்டதாக மௌனி பூரணமாக நம்பினார். இதை அடிக்கடி என்னிடம் சொல்லி யிருப்பதைக் கேட்டிருக்கிறேன். I have attained immortality through literature" என்பதை மிகவும் உணர்ச்சிப் பெருக்கோடு கூறுவார்.

மௌனி தன் கதைகளை - அதாவது முப்பத்தாண்டுகளுக்கு முன்பு எழுதிய கதைகளை - ஒவ்வொரு வரியாக, ஒவ்வொரு சொல்லாக நினைவிலிருந்து சொல்லும்போது, அவை அப்போதுதான் எழுதப்பட்டதைப் போல் கேட்பவருக்குப் படும். அப்படியொரு பிடிப்பை தனது சிறுகதைகளில் கொண்டிருந்தார். ஏதோ பொழுது போக்கிற்காக எழுதவில்லை என்று அவர் பேச்சிலிருந்து உணரலாம்.

1967ல் மௌனிக்கு வயது அறுபதாண்டுகள் முடிந்தது. அதைக் கொண்டாட அவரின் சிறுகதைகளை காலவரிசைப்படியான தொகுப்பாக கொண்டுவர நான் கேட்டபோது அவர் மறுத்துவிட்டார். அதனால் 1963ல் வெளிவந்த 'மனக்கோட்டை' முதலாவதாகவும், 1936ல் வந்த 'ஏன்' கடைசி கதையாகவும் அந்த தொகுப்பில் இடம் பெற்றன. அதற்கு மௌனி சொன்ன காரணம் "என் கதைகள் ஒன்றுகூட அது எழுதப்பட்ட காலத்தைச் சார்ந்தது அல்ல. அவை எல்லாமுமே காலத்திற்கு அப்பாற்பட்டவை" "அப்படி என்றால் ஆராய்ச்சி செய்பவர்களுக்கு சங்கடமாக இருக்காதா?" என்று கேட்டேன். "என் இலக்கியத்திற்கு ஆராய்ச்சி தேவையில்லை! அவை அனுபவிக்கப்பட வேண்டியவை! "என்றார்.

அவரது மூன்றாவது மகன் பெங்களூரில் கணினி எஞ்சினியராக பெரிய பதவியில் இருந்தார். அவர் மணமாகி இரண்டு ஆண்டுகள் கூட நிறைவுறாத நிலையில் திடீரென்று குளியல் அறையில் மின்சாரம் தாக்கி இறந்து போய்விட்டார். இந்த மகனிடம்தான் மௌனி பெரிய மதிப்பு வைத்திருந்தார். தன்னுடைய மேதமை அவ்வளவையும் அவன் பெற்றிருக்கிறான் எனக் கூறுவார். அவன் கம்ப்யூட்டரில் பெரிய சாதனைகள் செய்யப் போகிறான் என்று எதிர்பார்த்தார். அந்த கோர மரணம் நடந்த நேரமானது மிகக் கொடுமையானது. சில நாள்களில் அமெரிக்காவிற்கு அவன் பயணம் செய்வதாக இருந்தபோது நடந்தது. மூன்றாம் மகனின் மரணம் மௌனியின் உடல் நலத்தையும் உள்ளத்தையும் மிக ஆழமாகப் பாதித்தது. முதல் மகன் முப்பத்திரெண்டாம் வயதில் மரணமடைந்தது; இரண்டாம் மகன் இருபத்தெட்டாம் வயதில் பைத்தியமானது; மௌனியை இப்படி புத்திரசோகம் வாட்டிவிட்டது. இந்த துயரத்திலிருந்து மீள மௌனிக்கு பல ஆண்டுகள் ஆகின. அவர் பேசிக்கொண்டிருக்கும் போது மூன்றாவது மகனின் நினைவு வந்துவிட்டால், குழந்தைபோல் தேம்பித் தேம்பி அழுவதைப் பார்த்திருக்கிறேன். மூன்றாவது மகனின் மரணத்தால் பாதிக்கப்பட்ட நிலையில்தான் 'தவறு' என்ற இறுதி கதை எழுதப்பட்டது. அது 'கசடதபற' வில் 1971ல் வெளியிடப்பட்டது.

மௌனி சில விநோத பழக்க வழக்கங்களைக் கொண்டிருந்தார். அவற்றைப் பற்றி என் புத்தகமான 'மௌனியுடன் இருபதாண்டுகள்' என்ற புத்தகத்தில் எழுதியிருக்கிறேன்.

---

# 3

# மௌனியின் படைப்புலகம்

மௌனி தான் எழுதத் தொடங்கியதே தற்செயலான சம்பவம் என்று எழுதியிருக்கிறார். மணிக்கொடியில் வந்த சிறுகதைகளைப் படித்துவிட்டு அவர் தானும் ஏன் எழுதக் கூடாது என்றுதான் எழுதிப் பார்த்திருக்கிறார். அவர் எழுதுகிறார். "35 ஆண்டுகளுக்கு முன் படித்து முடித்து, வேலைக்கென்று ஒன்றும் போகாமல் கும்ப கோணத்தில் காலம் கழிக்கும் அநேக மாஜி மாணவர்களில் நானும் என் மனப்போக்கிற்கிசைந்த ஐந்தாறு பேர்கள் சேர்ந்த ஒரு கோஷ்டியில் ஒருவனானேன். ஆர்வ மிகுதியில் படித்தும், தெளிவுகாண அநேக விஷயங்களைப் பற்றி விவாதித்தும் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தோம். எத்துறை, என்பதின்றி, அரசியல்-சங்கீதம்-வேதாந்தம்-மொழிப்பிரச்னை-இலக்கியம் இத்யாதி எதையும் பற்றி ஆங்காங்கே அவ்வப்போது கூடிப் பேசுவது உண்டு."

"1933ம் வருஷத்தில் மகாமகம் வந்தது. அதற்காக ஒரு விரிவான கண்காட்சி ஒரு மாதம் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த ஒரு மாதகாலம் அம்மைதானத்தில் நாங்கள் இப்படிப் பேசிப் பொழுதைக் கழித்தோம். அந்த சமயந்தான் திரு ராமையா எங்களுக்கு அறிமுகமானது. அவர் கதர் போர்ட்டுக்காக வந்திருந்தவர் என நினைக்கிறேன். எங்களுடைய நண்பர் ஒருவர் சென்னையில் சட்டக் கல்லூரியில் படித்தவருக்கு அவரை தெரிந்ததின் மூலமாக எங்களுக்கு அறிமுகமானார். எங்கள் மத்தியில் எங்கள் பேச்சிலும் கலந்து கொள்ளுவார்."

"ஒருநாள் ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் கூறியது ஞாபகத்தில் இருக்கிறது. அதுதான் உள்ளூரபதிந்து ஒரு வருஷத்திற்கு மேலாக என்னை எழுதும்படி தூண்டியதுபோலும். என்னைப் பார்த்து 'நீங்கள் சிறுகதைகள் நன்றாக எழுதமுடியுமென நினைக்கிறேன். மணிக்கொடி பத்திரிகைக்கு எழுதுங்கள்' என்று அவர் சொன்னார். 'எவ்விதத்தில் நான் சிறுகதை ஆசிரியனாக முடியும்' என்று அவருக்குத் தோன்றியது

என்பதை அவரால்தான் சொல்ல முடியும்! மகாமகம் முடிந்து ஒன்றரை வருஷங்கள் ஆகிவிட்டது. ராமையாவின் ஞாபகத்தோடு நான் சிறுகதை எழுதும் நோக்கமும் சென்றுவிட்டது."

"1935 ம் வருஷம் இறுதியில் ஏதோ ஒரு வேகத்தில் 6,7 சிறுகதைகளும் ஒரு நெடுங்கதையும் எழுதினேன். பிரசுரிக்கும் நோக்கம் எனக்கு இல்லை. எழுதமுடிகிறதா என்று பார்க்கும் நோக்கம் போலும். மேலும் அதன் மதிப்பைத் தெரிந்து கொள்ள என் நண்பரில், துல்லிய இலக்கிய சுரணை உள்ள ஒருவரிடம் கொடுத்து அவர் அபிப்பிராயத்தைக் கேட்டேன். அவர் சொன்னது நான் எதிர்ப் பார்த்ததைவிட கொஞ்சம் திடுக்கிட வைத்தது. ஒரு வாரத்தில் அவைகள் உயர்தரமானதென்றும் தமிழில் அதுமாதிரி என்றும் இருந்ததில்லை என்றும் மேலும் அதைப் போடக் கூடிய பத்திரிகைகள் கூட இல்லை என்றும் சொல்லிவிட்டு எப்படியாவது அதைப் பிரசுரிக்க ஏற்பாடு செய்யும்படி சொன்னார்."

"நான் எழுதியவைகளை, மேலே குறிப்பிட்ட என் வக்கீல் நண்பரிடம் அனுப்பி எந்த பத்திரிகை ஆசிரியரிடமாவது காட்டி போடத் தகுதியுள்ளதாயின் போடும்படியும் எழுதியிருந்தேன்.பத்து தினங்களுக்குள் இவைகளை ராமையாவிடம் கொடுத்ததாகவும் அதைப்படித்து மிக நன்றாக இருப்பதாகப் பாராட்டி தன் மணிக் கொடியிலேயே பிரசுரிப்பதாக அவர் சொன்னதாகவும் பதில்வந்தது."

"1936 பிப்ரவரியில் என் முதல் கதை பிரசுரமாகியது. பிறகு ஏப்ரலில் நான் எழுதிய நாலாவதோ ஐந்தாவதோ இரண்டாவதாக 'காதல் சாலை' என்ற தலைப்பில் வெளிவந்தது."

அவர் எழுதுவதைத் தொழிலாக எடுத்துக்கொள்ளவில்லை. அதனால் தான் எண்ணியபடியே, சமரசம் செய்துகொள்ளாமல் தம் படைப்புகளை எழுதினார். நாற்பதாண்டுகள் காலத்தில் மௌனி எழுதிய சிறுகதைகள் இருபத்தி நான்கேதான். முந்நூறு பக்கங்களுக்கும் சற்றே குறைவு தான் அவர் எழுதியவை. அதனால்தான் புதுமைப்பித்தன் "தமிழ் மரபுக்கும் போக்குக்கும் புதிதாகவும் சிறப்பாகவும் வழிவகுத்தவர் ஒருவரைச் சொல்லவேண்டும் என்றால் 'மௌனி' என்ற புனைப்பெயரில் எழுதி வருபவரைத்தான் குறிப்பிட வேண்டும். அவரைத் தமிழ் 'சிறுகதையின் திருமூலர்' என்று சொல்ல வேண்டும். கற்பனையின் எல்லைக் கோட்டில் நின்று வார்த்தைகளுள் அடைபட மறுக்கும் கருத்துகளையும் மடக்கிக் கொண்டு வரக்கூடியவர் அவர் ஒருவரே" என்றார்.

மௌனியின் சம காலத்தவர்களான புதுமைப்பித்தன் கு.ப.ரா. ந.பிச்சமூர்த்தி, ந.சிதம்பர சுப்ரமணியன், க.நா.சு , சி.சு. செல்லப்பா, லா.ச.ரா. தி.ஜானகிராமன் போன்றவர்கள் சிறுகதைகள் மட்டு மல்லாது, நாவல், நாடகம், கட்டுரை, கவிதை எழுதினார்கள். ஆனால் மௌனி சிறுகதை மட்டுமே எழுதியிருக்கிறார். சிறுகதை அதன் சாராம்சத்தில் கவிதைதான் என்று மௌனி சொல்வார். மௌனி தான் ஒரு நெடுங்கதை எழுதியதாகவும் அது மணிக்கொடிக்கு அனுப்பப்பட்டு பிரசுரிக்கப்படவில்லை, அது தனக்கு திரும்பவும் அனுப்பப்பட வில்லை என்றார். இந்த இழப்பைப் பற்றி மௌனியும் கவலை லப்பட்டது கிடையாது. மேலும் தன் சிறுகதைகளைச் சேர்த்து தொகுப்பாகவும் வெளியிட அக்கறையும் கொண்டதில்லை. க.நா.சு.தான் 1959 ல் மௌனியின் சிறுகதைகளைத் தொகுத்து வெளியிட்டார். அந்தத் தொகுதியில் மூன்று கதைகள் விடுபட்டுப் போயின. ஏனென்றால் அவை அப்போது கிடைக்கவில்லை. மௌனியும் தன் கதைகள் வெளிவந்த பத்திரிகைகளையும் பத்திரமாக வைத்துக்கொண்டதும் கிடையாது. ‘சிகிச்சை’ என்ற கதையை நான்தான், சி.சு.செல்லப்பாவின் உதவியால் தேடிக் கண்டுபிடித்து நான் 1967ல் வெளியிட்ட தொகுதியில் இடம்பெறச் செய்தேன். இப்படி அக்கறை இல்லாமல் இருந்தவர்தான் பின்னாளில் தன் கதைகளை வரிவரியாகப் பேசினார்.

ஒரு சாதாரண வாசகன் சிறுகதையில் தான் எதிர்பார்க்கும் எதுவுமே மௌனியிடம் இல்லாததைக்கண்டு குழம்பிப்போவான். ஏனெனில் அவன் மற்றைய சிறுகதையாசிரியர்களின் படைப்புகளில் காணப்படுகின்ற கட்டமைப்பு, கதை வளர்ச்சி, கதாபாத்திரம், கால ஒழுங்கு, நிகழ்ச்சிகள் இப்படிப்பட்டவை மௌனியின் சிறுகதைகளில் இல்லை. சமூகத்தின் காலப் பரிமாணங்களும், நடப்பு உலகமும், அதன் சாயைகளும் காணப்படவில்லை. அனுபவ காலம் அழிக்கப்பட்டிருப்பதையும் இருளும் வெளிச்சமும் வேறுபாடின்றி இருப்பதையும் காண்கிறான். இப்படிக்கூட புனைகதை இருக்கமுடியுமா? இப்படி ஏன் மௌனி எழுதுகிறார்? புறஉலகை ஒரு நிர்தாட்சண்யத்துடன் ஒதுக்கிவிட்டு அல்லது அதற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் ஏன் இப்படி எழுதுகிறார்? இப்படிப்பட்ட பரிச்சியமில்லாத உலகத்தை படைப்பதின் நோக்கம்தான் என்ன? ஆனால் ஒன்றுமட்டும் தெளிவாகத்தெரிகிறது. அவர் தமிழுக்குப் புதுமையானதைத் தந்திருக்கிறார்.

அவர் எழுதிய இருபத்திநான்கு சிறுகதைகளின் உள்ளடக்கமாக - உரிப்பொருளாக இருப்பது எது? புறஉலகின், சமூக யதார்த்தத்தின்

இயக்கங்களை, செயல்முறைகளை அவர் கதைகளில் காணமுடியாது. கதைமாந்தர்களின் அகவுலகம்தான் - உணர்வுகள்தான் அவரின் சிறுகதைகள். மேலும் மாந்தர்களுக்கு தனித்தன்மை கொடுக்கும் காலம் இடம் சார்ந்த ஆளுமைப்பண்புகளை மௌனியின் கதா பாத்திரங்களில் காணமுடியாது. அவர்கள் எந்தக் காலத்திலும், எந்த இடத்திலும் இருக்கக்கூடிய மனித இனத்தின் பண்புகளால் உருவாக்கப்பட்டவர்களாகவேதான் காணப்படுகிறார்கள். அதனால் என்னமோ மௌனி தன் கதைமாந்தர்களின் அநேகம் பேர்களுக்கு 'அவன்' 'அவள்' என்றே பெயரிட்டிருக்கிறார். மௌனி எந்த அனுபவங்களைச் சிறுகதையாக ஆக்கியிருக்கிறார்? அவர் பிற்காலத்தில்தான் தத்தவ நூல்களைப் படிக்கிறார். அதுவும் மௌனி தர்க்க ரீதியான எந்த தத்துவ முடிவுகளையும் ஏற்றுக் கொள்ளுவதில்லை. வாழ்க்கையின் அடிப்படையான, வினாக் களுக்கு விடைகாணும் முயற்சியில், ஒளியும் இருளுமுள்ள அந்தகாரங்களில் தென்படக் கூடிய தத்துவச் சாயல்களே மௌனியின் படைப்புலகமாக ஆகின்றன. காலம் என்றால் என்ன? மரணம் என்றால் என்ன? நிறைவேறாத காதல் படுத்தும் இம்சைகள்; சமூகம் போட்ட விதிகளை ஒதுக்கித் தள்ளிவிட்டு உருவான உறவுகள்; விழிப்பிற்கும் உறக்கத்திற்குமிடையே ஊடாடும் மனநிலைகள், ஐம்புலன்களின் வழியாக உள்புகும் புறஉலகின் யதார்த்தமும் கற்பனை உலகின் இருத்தலும் ஒரு சேர ஊடாடுவதும்; நினைவின் சுவடுகளும்; பொருள்களின் அநித்தியதன்மையும் - இப்படியாக மௌனியின் படைப்புலகம் நிறைந்து இருக்கிறது.

ஆண்-பெண் உறவுகளில் முக்கியமாக காதல் - அதுவும் உடற்கவர்ச்சி மட்டுமே சாராத - அதிகமாக அவர் கதைகளில் காணப்படுகிறது. அநேகமாக ஒவ்வொரு கதையிலும் பிரமிப்பை யூட்டும் பெண்ணின் சக்தியை ஆய்வு செய்கிறது. பெண்கள் ஆன்மீகச் சக்திக்கான திறமையை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறார்கள். மௌனியின் பெண்கள் காமப்பொருள்களாக எங்கும் சித்தரிக்கப் படவேயில்லை. இது குறிப்பிடப்பட வேண்டிய அம்சமாகும். அவர்கள் பெரும்பாலும் உயர்ந்த அகதளத்திலேயே இயங்குகிறார்கள். மௌனியின் சிறுகதை மாந்தர்கள் ஒவ்வொரு வரிடத்திலும் இருக்கும் 'நான்' என்பது பல கோணங்களிலிருந்து அணுகப்படுகிறது. மாற்றங்கள்தான் 'நானா' அல்லது அவற்றினூடே தொடர்ந்து மாறுதலடையாமல் வந்து கொண்டிருப்பதுதான் 'நானா?' அப்படி என்றால் அது என்ன? எப்படிப்பட்டது? அது எப்போதும், ஆரம்பித்திலிருந்தே தனித்தே இருந்ததா? அதற்கும் பிரபஞ்சத்திற்கும்

என்ன தொடர்பு? அது பிரபஞ்சத்திற்குள் அடக்கமா? இல்லையா? இவ்வாராய்ச்சி எதற்காக என்றால் இந்த 'நான்' என்பதை என்னவென்று ஒவ்வொருவரும் தெளிவாக்கிக் கொண்டோமானால் மனிதனை, அவன் வாழ்க்கையைப் பற்றி புரிந்துகொள்ள முடியும். மேலே சொல்லப்பட்ட கேள்விகளை வெளிப்படையாகச் சொல்லாமலே உணர வைக்கின்றன அவரது படைப்புகள்.

''சமீப சில வருஷங்களாக, தன் வாழ்க்கை குறிப்பற்று, போக்கு புரியாமல், பாதையில் நழுவிச் செல்லுவதான தோற்றம் கொள்ளலானான். எதேச்சையென கொள்ளுவதை மனது மறுக்கிறது. தன்னையும், தன் சூழ்நிலைகளையும், சம்பவங்களையும், ஒருமை கொள்ள வேண்டியிருக்கிறது. சூழ்நிலைக்களன்களில் ஒன்றி, அனுபவம் கொள்ள மனநிலை விரிவும் மாற்றமும் கொள்ளவும் வேண்டியிருக்கிறது. உலக வாழ்க்கையே, ஒரு பெரிய சூழ்நிலைத் தோற்றமெனக் கொள்ள வேண்டியிருப்பதில், தன் அறிமுகம் சரியென ஒருபோதும் தெரிய முடிகிறதில்லை என்றும் தெரிந்து கொள்ள, வெறித்து கனவென வாழ்க்கையைக் கண்டு நிற்பதான ஒரு எண்ணமும் இவனுக்கு அடிக்கடி எழுவதுண்டு. மனது வேதனை கொள்ளுவதாகிறது. எல்லாம் ஈசுவர சங்கல்பம் என, தன்னை விடுவித்துக் கொள்ளும் நம்பிக்கையும் இல்லை''( மனக்கோட்டை மௌனியின் கதைகள் 1991. பீக்காக் பதிப்பகம். பக்.1-2)

''தன்னை ஒரு தரம் பார்த்துக் கொண்டான். அப்போது தனிமையாக அவன் அந்த மைதான வாயிலில் நின்று கொண்டிருந்தான். உள்ளே பிரசங்கம் நடந்து கொண்டிருக்கிறது. தனியாக பைத்தியக்காரத்தனத்தில் தான் இருப்பதாக ஒரு எண்ணம் முதலில் - பிறகு உலகமே பைத்தியக்காரத்தனமாய்ப் போய்விட்டதோ என்ற யோசனையும், சம்சயமும், கடைசியாக, ஒன்றுமே புலப்படாமல் 'பைத்தியக்காரத்தனம்' என்று ஒரு தரம் முணுமுணுத்து மூச்சு விட்டான். யார் யார் எப்படி எப்படி என்பதை அவனால் உணர முடியவில்லை அப்போது'' (மௌனியின் கதைகள், 1991. மாறாட்டம், பக்: 34)

''அப்படியாயின் தான் யார், எப்படி? தான், தன் சுபாவம், குணம் என்பதெல்லாம் என்ன? தான் அல்லாததென ஒன்று தோன்ற, அதை மறுத்து மாறுதலை கொள்வதில்தானோ இவைகள் ஆகும்? மாறி மாறித்தானோ, நான் என்னுடைய என்பதெல்லாம் மறுப்பில் மறுதலையாக உண்மையெனத் தோன்றும்? அவ்வகையினால் இவைகளெல்லாம் ஸ்திரமெனக் கருத முடியுமா? உண்மையில்

இவைகளெல்லாம் என்ன? சுசீலாவினால் ஒன்றையும் தெளிவுறக் கண்டு கொள்ள முடியவில்லை. உருவற்று - இடமற்று - தன் வழியே உலாவும் குணங்கள், நான், சுபாவம் எல்லாமே ஊடுருவத் துளைத்துச் செல்ல குறியென யதேச்சையில் குறுக்கிடுகிறது பெயர், உருக்கொள்ள?'' (மௌனியின் கதைகள். 'பிரக்ஞை வெளியில், பக். 78)

'நேற்று நடந்ததை ஞாபகப்படுத்திக் கொள்ளும்போது நடந்ததா என்பதாகிறது; நடக்கிறதோ எனில் அப்படியே காலமென்பதின்றி காலத்தையும் மீறியதாகிறது;' (மௌனியின் கதைகள், 'மனக்கோலம்' பக். 88)

இந்த மாதிரியான கேள்விகளுக்கும், ஐயப்பாடுகளுக்கும் மௌனியின் கதைமாந்தர்கள் உள்ளாகின்றனர்.

'ஏன்'? 'குடும்பத்தேர்' 'கொஞ்சதூரம்' 'காதல் சாலை' 'பிரபஞ்ச கானம்', 'சுந்தரி' - இந்த ஆறு கதைகளும் 1936ல் மணிக்கொடியில் வெளிவந்தவை. இவை வெளியிடப்பட்ட மாதத்தைக் கொண்டு அந்தக் காலவரிசைப்படிதான் எழுதப்பட்டவை என்று சொல்ல முடியாது.

இவற்றில் 'காலம்', காதல் தோல்வியினால் வந்த வேதனை, திடீரென சம்பவிக்கும் மரணங்கள், சிக்கலற்ற உறவுகள் வருகின்றன.

'ஏன்' கதையின் கதைக்கருதான் பின்வரும் கதைகளில் பல பரிமாணங்களில் வளர்ந்து முதிர்ச்சி அடைந்தது எனலாம். மாதவன், தன் எதிர்வீட்டிலிருக்கும் சுசீலாவை பள்ளிகூடத்திலிருந்து வீடு திரும்பும்போது பார்க்கிறான். அப்போது அவளிடம் 'நான் உன்னை மறக்கமாட்டேன்' என்கிறான். அவ்வளவுதான் அவர்களிருவரின் சந்திப்பு. அவள் மணமாகி ஊரைவிட்டுப் போய்விடுகிறாள். அவனும் கல்லூரிக்கு படிக்க போய்விடுகிறான். பல ஆண்டுகள் கழித்து தன் வீடு திரும்புகிறான். அப்போது அவள் தன் கைகுழந்தையுடன் தெருவில் இருப்பதை தன் வீட்டு மாடியிலிருந்து பார்க்கிறான். மாதவனுக்கு அவள் கண்கள் பழையபடியே கேள்விக்குறிகளாகத் தோன்றின... ''திடீரென்று ஏன் என்ற கேள்வி அவன் மனத்திடையே எழுந்து விட்டது. சந்தோஷக்களையையும் அவன் முகத்தினின்று இழந்தான். மன நிம்மதியும் அதே கணத்தில் அவனை விட்டு அகன்றது. அவள் பார்வையின் கேள்விக் குறி இவனைத் தாக்கி, அதற்குத் தன் மனத்தில் தனக்குச் சாதகமாக அளித்துக் கொண்ட விடையும், மறுபடியும் மற்றொரு கேள்வியின் ஆரம்பம்தானே?'' (மௌனியின் கதைகள். 'ஏன்' பக். 288) அவன் கல்லூரி

திரும்பாமலே இறந்துவிடுகிறான். மாதவன் தன்னைத்தானே துன்புறுத்திக் கொள்கிறான். சுசீலா அவன் கற்பித்துக் கொண்டு வேதனைப்படுவதை உணர்ந்தவளாகத் தெரியவில்லை. ஆக மௌனியின் ஆண் கதைமாந்தர்கள் இப்படி தங்களைத் தாங்களே துன்புறுத்திக் கொள்பவர்களாகவே காணப்படுகிறார்கள்.

'குடும்பத்தேர்' கதையிலும் ஆண்-பெண் உறவுதான் கதையின் உள்ளடக்கமாக இருக்கிறது. ஆனால் பெண்மையின் ஒரு பரிமாண மான தாய்மையைப் பற்றிய கதை இது. வயதான கிருஷ்ணய்யரின் தாயார் இறந்துவிட்டாள். அவள் இறந்த பின்னர்தான் அவள் குடும்பத்தையே நடத்திச் சென்றதை அவர் உணர்கிறார்.

மௌனியின் கதைகளில் வழக்கமாக தேவதாசிகள் வருவதின் பின்னணியை வைத்துக் கொண்டு பார்த்தோமானால் அவர் பெண்மையை நோக்கிய விதம் புலப்படும். அவரது கதை மாந்தர் களின் உறவுகள் பெரும்பாலும் சமூகம் விதிக்கப்பட்ட கட்டு திட்டங் களிலிருந்தும், மரபுகளிலிருந்தும் விலகியே இருப்பவை; முரண் படுகின்றவை. ஆனாலும் இதே சமூகம்தான் குடும்பம் என்ற நிறுவனத்தைக் காலங்காலமாக நிலைநிறுத்தி வைத்துக்கொண்டு வருகிறது. ஆக இவ்விரண்டும் யதார்த்த தளத்தில் எதிரும் புதிருமாக இருப்பதைக் காண்கிறார் மௌனி. 'மரபு', நாகரிகத்தினால் வரும் மாற்றம் - எப்படி இரண்டையும் ஒருவன் தன்னுள் ஒத்திசைவு கொள்ளும்படிக்கு செய்கிறான். பழமை என்பதினால் எப்போதும் போற்றி வைத்துக் கொள்ள வேண்டும்தானா? புதுமை என்றால் மாற்றம் தானா?' இவ்விரண்டையும் எப்படிஎதிர் கொள்ள வேண்டும். நாகரீகத்தையும், நாகரீகத்தில் ஜனங்கள் முன்னேற்றத்தையும் 'கிருஷ்ணய்யரின் தாயார்' கண்டு கொள்ளாமல் இல்லை, கண்டு கொண்டு அவற்றைப் பயன்படுத்தும் வகையில்தான் வித்தியாசம்.

''சூன்ய மூளையில், அழகற்று மிருக வேகத்தில் தாக்குவது போன்று நவநாகரிகம், அவளிடம் தன் சக்தியைக் காட்ட முடியாது. எத்தனையோ தலைமுறையாகப் பாடுபட்டுக் காப்பாற்றி வரப்பட்ட, மிருதுவாக உறைந்த குடும்ப லக்ஷியங்கள் உருக்கொண்டவள் போன்றவள்தான் அவள். வெற்று வெளியிலும் தாழ்ந்த இடத்திலும் பாய்வதுபோலவன்றித் தணிவு பெற்று - அழகுபட, அமைதி யுடன்தான் நாகரிகம் அவளிடம் இசைவு கொள்ளும். திடீரென்று தோன்றும் பச்சை எண்ணங்களையும், பழக்க வழக்கங்களையும் பதனிடாமல் ஏற்று வழங்குவது முடியுமோ குடும்பங்களினால்?'' (மௌனியின் கதைகள். 'குடும்பத்தேர்' பக். 215)

'காதல் சாலை' 'கொஞ்ச தூரம்' இரண்டு கதைகளிலும் காதல் வயப்பட்ட ஆண்கள்தான் துன்புறுகிறார்கள். இவற்றை 'இரட்டைக் கதைகள்' என்றும் சொல்லலாம். ஏனென்றால் இவ்விரு கதைகளில் வரும் காதலில் தோல்வி அடைந்த ஆண்கள் இருவர்களுக்குமே பெயர்கள் சூட்டப்படாமலேயே 'அவன்' என்றே அழைக்கப் படுகின்றனர். இவர்கள் தம் வீடுகளை விட்டு வெளியே போகும் போது அவர்கள் மனோநிலைக்கேற்ப இயற்கையின் சித்தரிப்புகள் கவிதையாகவே வருகின்றன. ''கண்ணுக்கெட்டிய வரையில், தனித் தனி மரங்கள் தனிப்பட்டே தோன்றின'. 'இடிந்த மதிற்சுவரின் இடையே கோவில் பிரகாரத்தில் உள்ள புஷ்பச் செடிகள் தெரிந்தன. வாழ்க்கைத் திரையில் தீட்டப்பட்ட சித்திர உருக் காட்சியையே இவன் மனதில் கொண்டான். சிலசில புஷ்பங்கள் கொய்யப்படாமலே ஒரு பசுமைத் தோற்றத்தின் நடுநடுவே இருந்தன. மெய்மறந்த இன்பத்தில் அச்சித்திரக்காரன் அறியாது, மிகுந்த பகட்டுடன் சிறுதட்டு வர்ணப்பூச்சுகளை அத்திரையில் தீட்டினது போன்றுதான் அப்புஷ்பங்கள் பசுமையில் பதிந்திருந்தன. வாய்க்காலில் துணி துவைக்கும் பாராங்கல்லில் ஒரு சிறு குருவி உட்கார்ந்திருந்தது. அதுவும் திடீரென்று பறந்து அச்செடியில் 'ஏன் எங்கே' என்று கத்திக் கொண்டு மறைந்துவிட்டது. (கொஞ்சதூரம், பக். 218-19) ''சிறு வெண்மை மேகம் ஒன்று சூரியனை மெதுவாகக் கடக்கும்போது, வயல் வழியாக நிழல் பாய்ந்தோடியது'' (காதல்சாலை. பக். 242). இப்படி பல வரிகளைக் காணலாம்.

மௌனியின் கதைகளில் சங்கீதம் மிக முக்கியமான இடத்தைப் பெறுகிறது. சங்கீதம் - ஒரு குறியீடாகவும், உன்னத உயர்ந்த நிலையாகவும்; அமானுஷ்ய சக்தி வாய்ந்ததாகவும்; விழிப்பு-உறக்கம்; கனவு-நினைவு, ஒளி - இருள்; வெளி - காலம் ஆக இரண்டுமாக சங்கீதம் இருக்கிறது. இப்படி பற்பல பரிமாணங்களை கொண்டிருக்கிறது. 'பிரபஞ்ச கானத்தில்' கதாநாயகியே பிரபஞ்ச கானமாக உருவகப்படுத்தப்பட்டிருக்கிறாள். அவள் மிக அற்புதமாகப் பாடுவாள். ஆனால் அவள் பாடக்கூடாது என்று மருத்துவர்கள் தெரிவித்து விட்டார்கள். அவள் இருதயம் மிக பலவீனமான நிலையில் இருப்பதால் அவள் பாடினால் இறந்துவிடுவாள். அவள் மணநாள் அன்று மாப்பிள்ளை வீட்டார் அவளைப் பாடும்படி வற்புறுத்துவே பாடினாள். அவள் இறந்து விடுகிறாள். அவள் உடல் கீழே சாய்ந்ததும் அவளுள் சிறைபட்டுக்கிடந்த பிரபஞ்ச கானம், விடுதலை அடைந்துவிடுகிறது. அத்வைதத்தில் எப்படி ஜீவாத்மா வானது பரமாத்மாவோடு ஐக்கியப்படுகிறது என்பது ஓர் உவமையால்

விளக்கப்படுவது இங்கே நினைவுக்கு வருவதைத் தடுக்க முடியாது. அந்த உவமை: மண்குடத்தின் உள்ளே சிறைப்பட்டு இருக்கும் வெளியானது, அது உடைபட்டதும் எல்லையற்று விரிந்து கிடக்கும் வெளியோடு 'ஆகாசத்தோடு' மீண்டும் ஒன்றாகி விடுகிறது. இக்கதையில் படிமங்கள் செறிவாய்க் காணக்கிடக்கின்றன. 'இரவின் இருளைத் திரட்டி அடிவானத்தில், நெருப்பிடப்பட்டதே போன்று கிழக்கு புகைந்து, சிவந்து தணல் கொண்டது - காலைச் சூரியன் உதித்தான்', ( பக். 108, பிரபஞ்ச கானம்).

1937-38 ஆண்டுகளில் 'மிஸ்டேக்' 'மாறாட்டம்' 'நினைவுச் சுழல்' 'மாறுதல்' 'மாபெருங் காவியம்' '*சிகிச்சை*' '*அழியாச்சுடர்*' - ஆகிய சிறுகதைகள் வெளியிடப்பட்டன. இந்தக் கதைகளில் மௌனியின் படைப்பு ஆற்றலின் பலதரப்பட்ட பரிமாணங்களும், பாணிகளும், நடைகளும் வெளிப்பட்டன. காதல் தோல்வி, பொருள்களின் அநித்தியம், காலம், நினைவு, மரணம் - இவையே உரிப்பொருளாக ஆகின்றன.

'மாபெருங்காவியம்' 'குடும்பத்தேர்' 'மிஸ்டேக்' 'இந்நேரம் இந்நேரம்' - இம்மூன்று கதைகளிலுமே காதல் கிடையாது.

'மாபெருங் காவியம்' - இச்சிறுகதையிலிருக்கும் பத்திகள் பலவற்றை பலதடவைகள் படிக்க வேண்டும். ஏனெனில் சிக்கல்களும் சிடுக்குகளும் கொண்ட வாக்கியங்கள் கதை நெடுகிலும் காணக்கிடக்கின்றன. எழுத்தாளர்களை நேர்காணல் செய்யும்போது இந்தக் கேள்வி வழக்கமாகக் கேட்கப்படும் 'நீங்கள் ஏன் எழுது கிறீர்கள்?' மௌனி தான் ஏன் எழுதுகிறேன், தன்னை எழுதத் தூண்டுவது எது என்று கேட்கப்படாத கேள்விகளுக்கு பதில் அளிப்பது போலிருக்கிறது இந்தக் கதை. இக்கதை மாந்தனான கிட்டு தன் உயர்ந்த படைப்பான 'மாபெருங் காவியம்' என்ற புத்தகத்தை எழுதி முடித்துவிட்டான். கிட்டு சொல்கிறான், "என் வாழ்க்கை ஒரு உன்னத நிழல் ஆட்டம். ஒளி குன்றியது. என்னுடைய நிழலும் பார்வையினின்றும் மங்கிவிட்டது. விலகி நின்று உலக நாடகத்தைப் பார்ப்பதுதான் இப்போது நான் செய்வது". "ஏதோ நடுவில் விதி குறுக்கிட்டு அவனை ஒரு காவிய கர்த்தனாக்கிவிட்டது. ஒருக்கால் சிருஷ்டியிலும் வெளி விளக்கத்திலும் அடையும் ஒரு கண சாசுவதாம்ச ஆனந்தத்தைக் கொள்ள அவன் மனது விரும்பியதால் தான் இந்தப் புத்தகத்தை அவன் எழுதினான் போலும்.

"பிரபஞ்ச வெளியில் கட்டுப்பாடின்றித் திரியும் பறவை போன்ற ஞான உணர்வைப்பிடித்துக் கூட்டிலடைத்தது தான் அக்காவியம்.

சாசுவதானந்தத்தை வாக்கியத்தில் புதைத்துக் கண்டு களிப்பதில், கலைஞர்கள் கடவுளுடைய சிருஷ்டி ஆனந்தத்திற்கு ஒப்பானதை உணர்கிறார்கள் போலும். எவ்வகை சிருஷ்டியும் அழிவதற்கு விரைந்து செல்வதாயினும், அழிவின்றித்தான் அவர்கள் மனதில் அக்கண ஆனந்தம் பதிகிறது''. (மௌனி கதைகள் 'மாபெருங் காவியம்'. பக்.265-266).

கிட்டுவின் வாழ்க்கை வறுமையில் உழல்கின்றது. அவனுடைய ஆறு வயது மகனுக்கு காய்ச்சல் வந்து இறந்துவிடுகிறான். அவனைக் காப்பாற்றுவதற்கான மருத்துவச் செலவிற்கான பணம் கிட்டுவிடம் இல்லை. கிட்டு ''யதேச்சையாக மேஜையைப் பார்த்தபோது திராட்சைப் பழப் பொட்டலம் பிரித்தபடியே இருந்தது. அந்தப் பொட்டலக் காகிதத்தில் ஏதோ எழுதியிருந்தது. தனக்குத் தெரிந்த எழுத்தாகத் தோன்றியது. ''கிட்டு அப்போது அடைந்த மன அதிர்ச்சியில் ஒன்றுமே புரியாதவனானான். தன்னுடைய உன்னதப் புத்தகத்தின் ஏடுகளில் அந்தக் காகிதத்துண்டு ஒன்றென அவன் அறிந்த போது அவன் உள்ளமே வெடித்தது போன்றாகியது. அக் கணத்திலேயே, தான் அக்காவியம் செய்து முடித்தவுடன் தோன்றிய அந்த ஆனந்தம் அவன் மனத்தில் குடிகொண்டது'' (மௌனி கதைகள். மாபெருங் காவியம். பக். 269-270).

''கிட்டுவின் மனத்திலே தன்னுடைய இரு சிருஷ்டிகளை ஒருமிக்கப் பறிகொடுத்ததான எண்ணம் பரிகாசமாகவே பட்டது. எவ்வகை அல்ப மகிழ்ச்சி, இந்த சிருஷ்டியில் கொள்ளும் ஆனந்தம். உயிர் கொடுக்கப்பட்டவுடனே அவையாவும் உடனே அழிவிற்குத் தாமே எல்லாம் விரைந்து செல்கின்றன. சாசுவதமாகக் கொள்ள வேண்டின் உணர்வுகளுக்கு விளக்கம் கொள்ளுவது ஏன்?''

''தன்னுடைய காவியம் அழிந்ததில் அவன் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. மலரினின்றும் பிரிந்து வதங்கிய இதழை விட்டுச் சென்ற மணத்தை எங்கும் உணர்ந்தான். எதற்காக மலரையும் மணத்தையும் 'அவன்' ஒன்று சேர்த்தான். கேவலம் இது தொழில் செய்வதில் கொள்ளும் ஒரு ஆனந்தத்திற்காகவா?...'' (பக். 271)

இந்தச் சிறுகதை மௌனியின் இலக்கியக் கோட்பாட்டிற்கு விளக்கமாக இருக்கிறது.

'குடும்பத்தேர்' கதாநாயகரான கிருஷ்ணய்யருக்கு வயதாகி விட்டது. அவரின் தாயார் காலமாகிவிட்டார். அவர் மறைவிற்குப் பின்தான் அந்த குடும்பத்தை நிர்வகிப்பதில் எவ்வளவு உதவியாக

இருந்தார் என்பதை கிருஷ்ணய்யர் உணர்வதுதான் இந்தக் கதையின் கரு.

'இந்நேரம் இந்நேரம்' என்ற கதையில் வரும் செல்லக்கண்ணு பண்ணையாள். அவன் திருமணத்திற்காக அவன் அண்ணன் பெண் வீட்டிற்குப் பரிசம் போடப் போனவன் வெகு நாழிகை கழிந்தும் வீடு திரும்பவில்லை. செல்லக் கண்ணு பொறுக்க முடியாதவனாய் மண்வெட்டியை எடுத்துக் கொண்டு நல்ல கொளுத்தும் வெய்யிலில் உடல் வியர்க்க கிட்டத்தட்ட பாதிக் கொல்லை வெட்டிவிட்டான். அப்போதுள்ள அவன் மனவோட்டம் சித்தரிக்கப்படுகிறது.

'மிஸ்டேக்' - மௌனியின் மிகச் சாதாரண கதை. அதில் அரசின் அதிகாரவர்க்கத்தின் செயல்பாடு காட்டப்படுகிறது.

க.நா.சு. முதன்முதலாக மௌனியின் கதைகளைத் தொகுத்து வெளியிட்டார். அத்தொகுதிக்கு 'அழியாச் சுடர்' சிறுகதையின் பெயரையே சூட்டினார். மௌனியின் மிகச் சிறந்த சிறுகதைகளில் இதுவும் ஒன்று. கவிதையும் தத்துவமும் பின்னிப் படர்ந்திருக்கும் கதை இது. அகவுணர்ச்சிக்கும், அறிவுக்கும் நிறையவே வேலைதரும் கதை. கதை நாயகனானவன் தன் இளம் வயதில் பதின்மூன்று வயதுடைய பெண் ஒருத்தியைக் கோயிலில் சந்தித்தான். பின் ஒன்பதாண்டுகள் கழித்து அதே கோயிலில் மீண்டும் அவளைச் சந்திக்கிறான். முதல் சந்திப்பில் எழுந்த உணர்வுகளும் இரண்டாவது சந்திப்பில் எழுந்த உணர்வுகளும் உரையாடல்கள் மூலமாகச் சொல்லப்படுகிறது. முதல் சந்திப்பு: "அவள் பின்னோடு நான் சென்றேன். அநேகம் தரம், அவளைத் தொடக்கூடிய அளவு, அவ்வளவு சமீபம் நான் நெருங்கியதும் உண்டு... அடிக்கடி என் வாய் ஏதோ முணுமுணுத்ததும் உண்டு. அது, எதையும் சொல்வதற்கல்ல என்பது எனக்குத் தெரியும். ஏனெனில் சொல்லுவதற்கு ஒன்றுமில்லை."

"ஈசுவர சந்நிதியில் நின்று, தலை குனிந்து, அவள் மௌனமாகத் தியானத்தில் இருந்தாள். அவளுக்குப்பின் வெகு சமீபத்தில் நான் நின்று இருந்தேன். அவளுடைய கூப்பிய கரங்களின் இடைவழியாகக் கர்ப்பக்கிருக சரவிளக்குகள் மங்கி வெகு தூரத்திற்கு அப்பாலே பிரகாசிப்பதாகக் கண்டேன். அவள் கண்கள், விக்கிரகத்திற்குப்பின் சென்று வாழ்க்கையின், ஆரம்ப இறுதி எல்லைகளைத் தாண்டி இன்பமயத்தைக் கண்டு களித்தன போலும். எவ்வளவு நேரம் அப்படியோ தெரியாது. காலம் அவள் உருவில் அந்தச் சந்நதியில் சமைந்து நின்றுவிட்டது."

"தியானத்திினின்றும் விடுபட்டு என் பக்கம் அவள் திரும்பிய போது, ஒரு பரவசம் கொண்டவனேபோல் என்னையும் அறியாதே 'உனக்காக நான் எது செய்யவும் காத்திருக்கிறேன். எதையும் செய்ய முடியும்' என்று சொல்லிவிட்டேன்."

"அவளுக்கு மட்டும்தான் நான் சொன்னது கேட்டது என்பதில் எனக்கு அப்பொழுதே சந்தேகம். உள்ளிருந்த விக்கிரகம், எதிர்த் தூணில் ஒன்றி நின்ற யாளி அவையும் கேட்டு நின்றன என்று எண்ணினேன். எதிரே லிங்கத்தைப் பார்த்தபோது, கீற்றுக்குமேலே, சந்தனப் பொட்டுடன் விபூதி அணிந்த அந்த விக்கிரகம், உருக்கொண்டு, புருவஞ் சுழித்துச் சினங்கொண்டது. தூணில் ஒன்றி நின்ற யாளியும் மிக மருண்டு பயந்து கோபித்து முகம் சுளித்தது. பின் கால்களில் எழுந்து நின்று பயமூட்டியது." (மௌனியின் கதைகள். அழியாச்சுடர். பக். 40-41). ஒன்பதாண்டுகள் கழித்து அதே கோயிலில் இரண்டாவது சந்திப்பு நடக்கிறது. "எதிர்பாராது நேர்ந்த இந்தச் சந்திப்பினால் அவளிடம் நான் ஒருவகை வெறுப்புக் கொள்ளலானேன்... நான் முன்பு அவள் காது கேட்கச் சொன்னவற்றை நினைத்துக் கொண்டபோது, என்னையே வெறுத்துக் கொள்ளாதபடி அவள் புதுத் தோற்றம் ஆறுதல் கொடுத்தது. முழு வேகத்தோடு அவளை வெறுத்தேன்... ஆனால் அவள் கடவுளின் முன்பு தியானத்தில் நிற்கும்போது, தன்னுடைய மேற்பூச்சை அறவே அழித்துவிட்டாள். கடவுளின் முன்பு மனிதர்கள் எவ்வளவு எழில் கொள்ள முடிகிறது, எத்தகைய மனக்கிளர்ச்சிக்கு உடன்படுதல் முடிகிறது என்பதை அவளைப் பார்த்ததும் நான் உணர்ந்தேன்.

"அவள் தியானத்தின் மகிமை என்னைப் பைத்தியமாக்கி விட்டது. வெறித்து வெறுமனே நிற்கச் செய்தது. ஒரு இன்ப மயம், ஒரு பரவசம். திரும்பிய அவள் என்னைப் பார்த்ததும் கண்டு கொண்டு விட்டாள். எதிரில் நின்ற தூணை உன்னிப்பாய், அவள் சிறிது நேரம் பார்த்தாள். என் வாக்கின் அழியாத சாஷியாக அமைந்து நின்ற அந்த யாளி எழுந்து நின்று கூத்தாடியதைத்தான் நான் பார்த்தேன். மேலே உற்று நோக்கிய போது ஐயோ! மற்றொரு யாளி வெகுண்டு குனிந்து, என்னைப் பார்த்துக் கொண்டிருந்தது. அவள் பார்வை என்னை ஊடுருவித் துளைத்துச் சென்றது. ஒருவன், தன் உள்ளூர உறைந்த ரகசியத்தை, பைத்தியத்தின் பகற்கனாவில் பாதி சொல்லிவிட்டு மறைவதுபோல அவள் பார்வை என்னைவிட்டு அகன்றது. உணர்ச்சிகள் எண்ணங்களாக மாற யத்தனிக்குமுன் அவள் சொன்னது என்னவென்பதை மனம் புரிந்து கொள்ளுமுன் அவள் போய்விட்டாள்." (மௌனியின் கதைகள், அழியாச்சுடர் பக். 45-46).

இந்தக் காலகட்டத்தில் எழுதப்பட்ட இன்னொரு மிக அற்புதமான கதை. 'மாறுதல்'. கதை இப்படி ஆரம்பமாகிறது. "நேற்று மாலையே, அவர்களுக்குத் தந்தி கொடுத்துவிட்டான். ஆனால் அக்கம்பக்கத்தில், ஒருவருக்கும் சொல்லவில்லை. ஒருவருக்கும் தெரியவில்லை. காலை ஒன்பது மணி வண்டிக்குத்தான் அவர்கள் வரமுடியும்." இறந்துபோன தன் மனைவியின் அருகிலே தான் இரவு முழுவதும் படுத்திருந்ததை, காலையில் விழித்தபோதுதான் உணர்கிறான். அவன் தெருவாயிலுக்கு வருகிறான். மனைவியின் பெற்றோர்கள் வரும்வரை, அவன் பார்த்துக்கொண்டிருக்கும் வெளிப்புற உலகம் சித்தரிக்கப்படுகிறது. வாழ்வு, மரணம் பற்றிய படிமங்கள் செறிவாக இருக்கின்றன.

'நினைவுச் சுழல்' - இதில் சங்கீதம் உரிப்பொருளாக இருக்கிறது. இதன் கதாநாயகன் சேகரன். இவன் பிடில் வாசிப்பவன். இவன் குடித்தே செத்துப் போகிறான். "இரவு அவன் அறையை அடைந்ததும் அவன் மனது நிதானமின்றிச் சலித்தது. மிச்சம் மீதி குப்பியி லிருந்ததைக் குடித்தான். மறுபடியும் தன் பிடிலை எடுத்து வைத்துக் கொண்டு வாசித்தான். அலுப்பும் சோகமும் தந்திகளினின்றும் வீறிட்டன. சேகரன் தன்னுடைய பழைய நிலையை அடைய வேண்டினான். அப்படியாயின் தன்னால் எவ்வகை நிலையில் வளர முடியும் என்பதை எண்ணினான். உலகிலே ஒளிக்கப்பட்டவனே போன்று இருத்தலை மிக வேண்டினான். ஆனால் இப்போது எங்கு ஒளிந்து கொண்டிருக்க முடியும் என்பதுதான் புரியவில்லை. போவதாகத் தோன்றும் இடமோ எல்லையற்றதாக இருந்தது. செய்ததைத் துடைத்து மறைக்கும் வல்லமை இல்லாததனால், தான் செய்த ஒவ்வொரு காரியங்களின் மதியீனத்தையும் கண்டான்." (நினைவுச் சுழல், பக்.117)

'சிகிச்சை' கதையிலும் ஆண்-பெண் உறவு கருப்பொருளாக இருந்தாலும் கணவன்-மனைவி என்ற கோணத்திலிருந்து பார்க்கப் படுகிறது. டாக்டர் கோமதி மருத்துவம் பார்த்த கமலா இறந்து விடுகிறாள். டாக்டர் நவநாகரீகத்தில் மூழ்கிப்போனதால் மணம் செய்து கொள்ளாமலே இருந்தாள். ஆனால் சில ஆண்டுகள் கழித்து கமலாவின் அழகில்லாத கணவனையே திருமணம் செய்து கொள்கிறாள். இவளோ தான் திருமணமே செய்து கொள்ளப் போவதில்லை என்றும், திருமணம் என்பதே ஓர் அநாகரீகமான ஏற்பாடு என்று கருதி வந்தவள். எப்படி மனமாறினாள்? "கோமதி கமலாவைப் பற்றி பிரக்ஞையில் கலந்து நிற்கும் சீனுவைத்தான் அப்போது பார்த்தாள். அவ்வகையிலே அவனைக் காண

வேண்டுமென்பதுதான் அவள் ஆசை. அவன் புறம் திரும்பி, ''உங்களைத் தனியாக உங்களுக்காகவே நான் உங்களை மணக்கவில்லை. என்னுடைய மனதைக் கவர்ந்து ஆட்கொண்ட கமலாவின் நினைவு ததும்பி இருக்கும் உங்களைத்தான் நான் காதலித்து மணம் செய்து கொண்டேன்'' என்று சொல்லி அவன் கன்னத்தில் ஒரு செல்ல அடிகொடுத்து ஒரு முத்தமும் கொடுத்தாள்.'' (மௌனியின் கதைகள் - பக்.134)

'எங்கிருந்தோ வந்தான்' - காதலில் தோல்வி அடைந்தவன் தன் ஊரைவிட்டு நீங்கி வெளியூரிலுள்ள விடுதியில் தங்கி இருக்கிறான். அங்கே இறந்துவிடுகிறான். அவன் விட்டுச்சென்ற இரண்டு கடிதங்கள் மூலமாகக் கதையின் பின்பாதி சொல்லப்படுகிறது. அவன் தன் அறையில் இருக்கும்போது அவனே பாடிக்கொண்டிருப்பதைப் பக்கத்து அறையில் இருப்பவன் கேட்கிறான். ''பக்கத்து அறையிலிருந்து, கேட்டதும் கேட்காததுமாக, அடித்தொண்டையிலிருந்து அவன் பாடிக் கொண்டிருந்தான்... பாட்டும் கொஞ்சங் கொஞ்சமாக மறைந்துவிட்டது. அது மறைந்தவிடத்திற்கு என்னையும் இழுத்துச் சென்றதுபோலும்... என்னையே என்னுடைய சவத்தையே - நான் வெகு தூரத்திற்கு அப்பால் இருந்து பார்த்துக் கொண்டிருந்தேன். நானே உணர்ந்த என் இறப்பு, வருத்தம், ஆத்திரம், ஒரு அருவருப்பு, ஒருங்குகூடின. ஒரு கேலி நகைப்பு எங்கேயோ கேட்டது... மறுபடியும் என் சவத்தையே நான் பார்த்துக் கொண்டு இருக்கிறேன். இறப்பு...? இறப்பு...? அடைய ஆவல் கொண்டு, ஒரு ஸ்வரத்தை எட்டி எட்டிப்பிடிக்க மேலிருந்தும் கீழிலிருந்தும், முயலும் அவன் பாட்டை கேட்டுக் கொண்டிருந்தேன். என் உணர்வை உயர்த்தி, கனவிற்கும், நினைவிற்கும் உள்ள நுண்ணிய எல்லைக் கோட்டைத் துடைக்கவல்ல அவனுடைய கானம், சாதாரணமானதல்ல. ஆழித் தண்ணீரில் எல்லை பிரித்துக் கோடிட்டதுதானோ நம் வாழ்க்கை...? அசைந்து அசைந்து மிதக்கும் தோணி, (மனம்) எல்லை கடக்க அறியாது கடந்தது போலும். கனவின் கரையைத்தாண்டி, அவன் பாடிக் கொண்டிருப்பதைத்தான் நான் கேட்டுக் கொண்டிருந்தேன் போலும். நான் கனவு கண்டு கொண்டிருந்தேன் என்றால், எப்போது நான் விழிப்படைந்தேன்?.. இப்படிப்பட்ட உயர்வகை உணர்ச்சிச் சித்திரங்களையும் உன்னதக் கோவில்களையும் எழுப்பவல்லது அவன் கீதம்...'' (மௌனியின் கதைகள் பக். 152).

இக்கதை கதையா அல்லது நெடுங்கவிதையா என்று சொல்லும்படிக்கு இருக்கிறது.



மௌனியின் கதைகளில் காதல், ஆண்-பெண் உறவுகள் நுண்மையாகச் சொல்லப்படுகின்றன. கதை மாந்தரிடம் இருக்கும் 'நான்' 'தான்' என்ன என்பதையும் அறியும் முயற்சி எடுக்கப்படுகிறது. மௌனியின் விமர்சகர்கள் எல்லோருமே, அவர் அகவுலகத்தை, மனத்தின் அசாதாரணமான நிலையைத்தான் கதைகளாக ஆக்கியிருக்கிறார் என்று சொல்லுகிறார்கள். அத்வைதம் பனிமூட்டமாக அவர் கதைகளில் படர்ந்திருக்கிறது. ஆக ஒரே பாத்திரம் ஒரே சமயத்தில் இரட்டிப்பாக ஆவதும், அதன் இளமையும் முதுமையும் சமகாலத்தில் இருப்பதையும், இறந்த காலமும் நிகழ்காலமும் தம் தம் நிலைமாறி போவதையும் அவர் படைப்புலகில் காணலாம். இதற்கு சிறந்த எடுத்துக்காட்டாய் இருப்பது 'சாவில் பிறந்த சிருஷ்டி'. மௌனியின் அனைத்து படைப்புத்திறன்களையும் கொண்ட கதை. இந்தப் பிரபஞ்சம், மனித வாழ்க்கை - பல தத்துவ பார்வைகளின் மூலமாக அணுகப்படுகிறது. நனவோடை, சர்ரியலிச சொற்றொடர்கள் காட்டாறுபோல் சுழன்று ஓடுகின்றன. மௌனிக்கு காதல் என்பது உடற்கவர்ச்சி - இச்சையாக மட்டுமில்லை; 'பெண்மை'யின் அம்சமாகவே பார்க்கிறார். பெண்மையை ஒரு கருதுகோளாக சிந்திக்கிறார். சுப்பையர் தம் ஐம்பதாவது வயதில், தன் மனைவி இறந்தபின்பு தன்னைவிட மிகவும் குறைந்த வயதான கௌரியை இரண்டாம் தாரமாகத் திருமணம் செய்து கொள்கிறார். அவள் தங்கையின் திருமணத்திற்கு ஒரு மாதத்திற்கு முன்பே கௌரியை அனுப்பி வைக்கிறார். திருமணம் முடிந்தும் விட்டது. அப்போது திருமணத்திற்கு வந்தவர்களிடம் கலகலப்பாக சிரித்து மகிழ்ச்சியாக இருக்கும் கௌரியைப் பார்த்தபோது சுப்பையர் ஒருவித அதிர்ச்சி அடைகிறார். ஏனென்றால் இம்மாதிரியாக கௌரி தன்னுடன் இருந்ததே கிடையாது. உடனே அவளை வீட்டிற்குத் திரும்புமாறு கட்டளையிடுகிறார். அவர்கள் இரயில் பயணம் செய்யும்போது, ஓர் இளைஞன் அவர்களுக்கு எதிரான இருக்கையில் உட்காருகிறான். சுப்பையர், கௌரி, பெயரிடப்படாத இளைஞன் - இவர்களின் மனத்தில் ஓடும் எண்ணங்களே சிறுகதையாகிறது. கதை குறியீட்டு தளத்திலும், தத்துவதளத்திலும் இயங்குகிறது. சுப்பையர் - அதாவது கிழவன் - தனக்கு கணவனாக வாய்த்தானே என கௌரி மௌனமாக எதிர்க்கிறாள். "உள்ளே தன் பிறந்தகத்துக் கூடத்திலே அவள் தோற்றம், பேச்சு, சிரிப்பு, குதூகலம் - எல்லாவற்றையும் தன்னிடம் மறைத்துக் கொண்டுதான் பழகுகிறாள்..." (பக். 49). அந்த இளைஞன் முதலில் கௌரியை சுப்பையரின் மகள் என்று எண்ணினான். பின்பு சுப்பையரே கௌரி தன் மனைவி என்று சொல்லுகிறார். ஏற்கனவே

நொந்தமனத்தோடு இருக்கும் சுப்பையருக்கு மேலே வருத்தமுறும்படி அந்த இளைஞன் வந்து சேர்ந்தான். கணவன் நிலையை உணர்ந்த கௌரியின் மனம் வருத்தப்படுகிறது. ''கால வித்தியாசம் என்பதால் தன்னைப் பிடிக்க கிழவனும் வாலிபனும் ஒன்றெனத்தான் தென்படுகிறார்கள். காலையிலிருந்து தன்னைப் பிடித்த சனியன் பலரூபத்தில் ஆட்டுகிறான். கிழவனாகிக் கணவனாகிறான். ஓடும் ரயிலிலும் தொத்தி ஏறி எதிரில் உட்கார வாலிபம் கொள்கிறான். தான் பிறந்தவுடன் தன் உயிரைப் பிடித்த சனியன் தன் பெண் உருவம் என்பதை அவள் அறிந்தாள் போலும். உயிரைக் கொண்டு உடம்பைத் தொலைத்து வாழ முடிகிறதில்லை'' (பக். 57) ஓடும் இரயிலில் போய்க் கொண்டிருக்கும் இம்மூவர்களின் மனோநிலைக்கு ஏற்ப புறக்காட்சிகள் மிக அற்புதமாக சித்தரிக்கப்படுகின்றன.

'பிரக்ஞை வெளியில்' - இக்கதையில் இரண்டு சுசீலாக்கள் வருகிறார்கள். கதாநாயகனான சேகர் பட்டினத்திற்கு வருகிறான். அங்கே தன் மனைவியின் பெயரான சுசீலா என்ற பெயரையே வைத்திருக்கும் மணமாகாத பெண்ணான சுசீலாவைச் சந்திக்கிறான். அவர் களிடையே நட்பு ஏற்படுகிறது. பட்டினத்திலேயே கார் விபத்தில் சேகர் இறந்துபடுகிறான். பெண்மை பெண் பாத்திரத்தின் வழி அணுகப்படுகிறது.

மௌனியின் கதைகள் பல பெண்மையின் பல பண்புகளைப் பற்றியதாக இருக்கின்றன. மணமாகாத பெண்கள், மனைவி, நகரத்தின் விலைமகளிர், பழங்காலத்தின் தேவதாசி. இப்படியாக இவர்களில் பெரும்பாலோர் குடும்பம் உறவுகளிலிருந்தும், மரபுகளி லிருந்தும் அப்பாற்பட்டவர்கள். சிலர் மட்டுமே குடும்பச் சூழலில் இருப்பவர்கள். 'சாவில் பிறந்த சிருஷ்டி' 'பிரக்ஞை வெளியில்' 'உறவு, பந்தம்பாசம்', - இக்கதைகள் பெண்மை பற்றிய முக்கியமான கதைகள். ஒவ்வொரு கதையும் பெண்மை என்ற மகாசக்தியின் வெளிப்பாட்டைக் கொண்டிருக்கிறது. வாழ்க்கைச் சுழலில் அகப்பட்டுக் கொண்ட பெண்கள், எப்படி தங்களுக்குள் முடங்கிக் கிடக்கும் சக்தி வெளிப்படுவதை உணர்கிறார்கள். ''சாவில் பிறந்த சிருஷ்டி'யில் கௌரி, ''உலகைத் தழுவும் 'பெண்மை'யை விசுவரூபத்தில் கொண்டாள் போலும்'' (பக். 57)

மௌனியின் ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு தடவை படிக்கும்போதும் ஒவ்வொரு அர்த்தத்தைக் கொடுக்கிறது. அவரது கதைகள் ஒவ்வொன்றும் ஒரு புள்ளியில் தொடங்கி நேர்க்கோட்டில் சென்று இன்னொரு புள்ளியில் முடிவதில்லை.

---

# 4
# சிறுகதைப் பண்புகள்

மௌனியின் இருபத்தி நான்கு கதைகளில், 'இந்நேரம் இந்நேரம்' 'குடும்பத்தேர்' 'சுந்தரி' 'மாபெருங்காவியம்' 'மிஸ்டேக்' தவிர எல்லாமுமே நிறைவேறாத காதலின் உணர்வுகளை மையமாகக் கொண்டிருக்கின்றன. ஆனால் அது பால் கவர்ச்சியை அடிப்படை யாகக் கொண்டதில்லை. மாறாக பிரபஞ்ச இயக்கத்தின் இரண்டு எதிரும் புதிருமான 'ஆண்-பெண்' என பெயரிடப்பட்ட சக்திகளின் விளையாட்டின் சித்தரிப்பே தவிர தனி நபர்களின் உணர்ச்சிகள் அல்ல. இவர் கதைகளில் பல இடங்களில் கையாளப்படும் சொற்களான 'நிழல்' 'கனவு' 'காலம்' 'தோற்றம்' 'பெண்மை' 'ஏதேச்சம்' 'சங்கீதம்' போன்றவைகளாலும், 'கவிதை வர்ணனைகளாலும், எதிர்யெதிர் பண்புச் சேர்க்கைகளாலும், சர்ரியலிஸ எழுத்துகளாலும் தற்குறிப்பேற்ற அணிகளாலும் உணர முடிகிறது.

இலக்கியத்தை மௌனி எப்படிப் பார்த்தார்? எனக்கு அளித்த பேட்டியில் மௌனி இப்படி சொல்லுகிறார். "இலக்கியத்தில் 'கலை, தத்துவம், சமயம்' எல்லாமே ஒன்றாக இருக்கின்றன." (மௌனியின் கதைகள், பக். 310). இந்த மேற்கோளைப் படிப்பவன் தன் மனத்தில் நன்றாக பதித்துக் கொண்டால் மௌனியின் கதைகளை எப்படிப் பட்டவையென உணர்ந்து கொள்வான். அவர் தான் ஏன் எழுதுகிறேன் என்பதைத் தம் சிறுகதைகளின் பாத்திரங்கள் வாயிலாக வெளி யிட்டிருக்கிறார். மௌனிக்கு எழுதுவது என்பது உடல் ரீதியான இம்சையாகும்; தான் எழுதியவற்றைத் திரும்பத்திரும்ப எழுதி பார்ப்பார். தனக்கு திருப்தி கிடைக்கும்வரை, சொற்களை மாற்றி மாற்றி எழுதுவார். ஏன் அப்படி என்று கேட்டால் - "இப்போதுதான் எழுதுவதன் முட்டாள்தனத்தையும் கஷ்டத்தையும் உணர ஆரம்பிக்கிறேன்."

"கடுங் கோடையானதினால் கொஞ்சம் இளகிய என் மூளை நன்றாக உருக்கம் கொண்டு அபார அற்புதக் கற்பனைகளை ஏராள மாகக் கொட்டுகிறது. உருகி வழியும் கற்பனைகளைத் தாறுமாறாக

ஒட்டம் கொள்ளாமல் தடை செய்வதில்தான் என் முழுப் பிரயாசை யையும் செலுத்த வேண்டியிருக்கிறது. எனினும் அநேகர் இப்பிரயாசை சயில்லாமலே எழுதுவதாக எனக்குப் படுகிறது. அவர்களிடம் எனக்குப் பொறாமை உண்டாகக் காரணமாகிறது." (சுந்தரி, பக். 248).

எழுதுவது ஏன்? என்ன எழுத வேண்டும்? எதைப்பற்றி எழுத வேண்டும்? இந்த வினாக்களுக்கெல்லாம் அவர் கதைகளிலேயே விடைகள் கிடைக்கின்றன.

"...நடந்ததைப்பற்றி எழுதுவது என்றாலோ - அது நவீனத்திற்கு அழகன்று என்பதினால் - அது மனத்திற்கு இப்போது பிடிக்கவில்லை. நடக்கப் போவதை எழுதினால், அது பவிஷ்யத் புராணமாகிவிடும் என்பதனால், அதுவும் அவ்வளவு நாஸூக்கு இல்லை. நடக்கிறதைப் பற்றியே நான் ஒரு கை பார்க்கிறேன்.

"கலியில் எது வேண்டுமானாலும் நடக்க முடியும் என்று பண்டைக் காலத்திலேயே எழுதியிருப்பதாக எனக்குக் கேள்வி உண்டு. பழைய காலத்தில் எழுதியிருந்தாலும், எழுதியிருப்பதாகக் கேள்விப்பட்டாலும், அதில் எனக்கு நல்ல நம்பிக்கை. இக்கலியில் எதுவும் நடக்க முடியுமென்றால், நான் எழுதுவதில் எனக்குக் கொஞ்சங்கூட ஆச்சரியமில்லை. மற்றும் இவ்வகைச் சிந்தனைப் போக்கில் நான் ஒரு விநோதம் கண்டேன். நடக்கிறதை எழுத வேண்டு மானால், உண்மையில் நடக்கிறதையே எழுத வேண்டுமென்பதில்லை. ஏனெனில், இக்கலியில் எதுவும் நடக்க முடியும் என்று சொல்லி யிருப்பதன் நிமித்தம். ஏன் எழுதினதெல்லாம் நடக்கிறதாக இருக்கக் கூடாது? இந்த எண்ணமே என் மனத்திற்குத் தோன்றியதை எழுதத் தைரியமாக, மாறுகிறது. ஒருக்கால் நான் எழுதியதுதான் நடக்கிறதாக ஏன் இருக்கக்கூடாது?" (சுந்தரி, பக்.249).

எழுதுவது ஓர் ஆனந்தமாகும். "ஒருக்கால் சிருஷ்டியிலும் வெளி விளக்கத்திலும் அடையும் ஒரு கண சாசுவதாம்ச ஆனந்தத்தைக் கொள்ள அவன் மனது விரும்பியதால்தான் இந்தப் புத்தகத்தை அவன் எழுதினான் போலும்". "பிரபஞ்ச வெளியில் கட்டுப்பாடின்றித் திரியும் பறவை போன்ற ஞான உணர்வைப் பிடித்துக் கூட்டில் அடைத்ததுதான் அக்காவியம். சாசுவதானந்தத்தை வாக்கியத்தில் புதைத்துக் கண்டு களிப்பதில், கலைஞர்கள் கடவுளுடைய சிருஷ்டி ஆனந்தத்திற்கு ஒப்பானதை உணர்கிறார்கள் போலும். எவ்வகை சிருஷ்டியும் அழிவிற்கு விரைந்து செல்வதாயினும், அழிவின்றித்தான் அவர்கள் மனதில் அக்கண ஆனந்தம் பதிகிறது". (மாபெருங் காவியம். பக். 265-266).

"சிருஷ்டியில் கொள்ளும் ஆனந்தம் எத்தகையது என்பது அவனுக்கு அப்போது தெரியும்" (மேலது, பக். 272).

இலக்கியப் படைப்பும் பிரபஞ்ச படைப்பும் ஆனந்தத்தினால் வந்தது. மேலும் ஏதேச்சையானது. அதாவது காரண காரியத்தால் விளக்கம் கொள்ள முடியாதது.

பல இடங்களில் வரும் சொற்களில் 'நிழலும்' ஒன்று. நிழல் தோன்றுவதற்குத் தூலமான பொருளும் ஒளியும் தேவை. இரண்டில் ஒன்று இல்லாவிடில் நிழல் தோன்றாது. ஒரு பொருளின் இருண்ட உருவம்தான் நிழல். மௌனியிடம் நிழல் என்ற சொல் எப்படி யெல்லாம் அர்த்தம் கொள்கின்றது. "பின் நீண்டு தொடர்ந்த, அவள் நிழலேபோன்ற நானும் அவளைத் தொடர்ந்தேன்" (அழியாச்சுடர், பக். 42). "எவற்றின் நடமாடும் நிழல்கள் நாம்" (அழியாச்சுடர். பக். 41.) " நான் விதியின் நிழல், என்னிடம் காதலின் முழு வசீகரக் கடுமையை நீ காணப் போகிறாய்" (அழியாச்சுடர், பக்.45) "பெயர் கொண்ட ஒன்று, தன் உருவை சுமையெனக் களைந்து, பெயரெனத்தான் எட்டிய வெளியில் லேசாக மிதப்பதைப் பார்த்து நிற்பவள் போலும், சுசீலாவென்ற பெயர், மறுபடி உருக் கொண்டால் யாராக முடியும்? இருளில், உடலை விட்டகன்ற நிழல், ஒளி கண்டவுடன் சரியெனத்தானா, பிரிந்த தன்னுடல் எனக் கண்டு மறுபடியும் உடலுடன் ஒட்டிக் கொள்கிறது" (பிரக்ஞை வெளியில், பக். 82). "அந்தி மங்கல் வெளிச்சத்தில் நிழலின்றி நடந்தவன் பைத்தியக்காரனைப் போல, முன்னும் பின்னும் உன்னிப்பாய், பார்த்துக் கொண்டே நடந்து கொண்டிருந்தான்" (நினைவுச்சுழல். பக். 109). "மாலையில் கோவிலுக்குச் செல்லுபவர்கள் நிழல்கள் அவர்களை முந்திக் கொண்டு கர்ப்பக் கிருஹ இருளில் மறைந்து ஒன்றாவது, ஒரு உன்னதக் காட்சியென மனதில் கொள்ள இருக்கும்" (உறவு, பந்தம், பாசம், பக். 138) "அவள் நிழல் பாதிக்குமேல் பக்கவாட்டில் கீழ் குறட்டுச் சுவரில் ஆடிக் கொண்டிருந்தது" (உறவு, பந்தம்-பாசம் பக்.141) "முன் நீண்டு சென்ற நிழல்கள் சலித்து ஒன்றைச் சென்று கலந்து விலகியும் தெருவழியே சென்று கொண்டிருந்தன" (உறவு, பந்தம், பாசம், பக். 149) "அந்த அந்திவேளையில் தன் நிழல்கூட இவனுக்குத் தெரிய நியாயமில்லை" (அத்துவான வெளி, பக். 197) 'ஒருவர் ஒருவர் நிழலென மாறிமாறி, பற்றிப் போய்க் கொண்டிருந்தனர்.' "தன் நிழலென அவனைப் பார்த்தபோது, மனதில் திடீரென ஒரு யோசனை தோன்றியது." "அவனாகவே தானும் ஆகிக் கொண்டிருப்பதில்தான் அவன் நிழல் தொடருவதினின்றும் விடுபட முடியும் என்ற எண்ணம்

தோன்ற ஆரம்பித்தது..." (அத்துவான வெளி, பக்.203) "மயானம், பிணம் எரிதல், எதிரே ஒரு பெரிய மரம், எல்லாம் தெரிய ஒரு அத்துவான வெளி... ஆனால் யோசிக்க யோசிக்கவோ... அல்லது பார்க்கப் பார்க்கவோ இதற்கென அதுவும் அதற்கென இதுவுமாக ஒன்றை ஒன்று நிழலெனக் காட்டிக் கொடுக்க இருந்தது" (அத்துவான வெளி, பக்.205). "இலைகளின் ஆட்டத்தைவிட ஒளி கொடுக்க எரியும் பிரேதமும் சேர்ந்து ஆடியதுபோல அவைகளின் நிழலாட்டம் வெகு விநோதமாகத் தெரிந்தது. களைத்ததெனச் சில அடிக்கடி சோர்வு கொண்டு திடீரென கீழே விழுந்து கொண்டு பன்றிகளென மேயவும் ஆரம்பித்தன. கண்ட கண்ட நிழல்களைத் தின்று திருப்தியில் உறுமிச் சிரித்தது பயங்கரம் கொடுத்தது." "நிழலைப் பறிகொடுத்து நின்ற பிசாசுகள் திடீரென எகிறிக் குதித்து மரத்தின் மேல் போய் மறைந்தன. மறுபடியும் தொடர, நிழலை அடைய வேண்டி இரவிலும் நிழல் கொடுக்க நின்றிருக்கும் மரத்திடை மறைந்தது போலும்... வாலிழந்து விடுபட்டவைகள் கீழே விழுந்து குட்டிப் பிசாசுகளான மீண்டும் நிழலோடு குதித்து ஆடலாயின." "சிறிது ஏமாந்து பார்த்துக் கொண்டிருந்ததில் தன் நிழலை அவன் தின்றுவிட்டது." (அத்துவான, பக். 206-207). "இவன் நிழல் வெகுவாக முன் நீண்டது" (கொஞ்ச தூரம், பக். 221) "தன்முன் வாழ்வெலாம் எவ்வெவ்விடத்தில் எவ்வெவ்வகை கொண்டதாகிறது என்று, கனவின் நிழலென, உணர்விற்கப்பால், தோன்றி மறையக் கண்டான் போலும். (தவறு, பக். 230) அவன் முன் குறுகிய அவன் நிழல் போய்க்கொண்டிருந்தது (காதல் சாலை, பக். 240). "சிறு வெண்மை மேகம் ஒன்று சூரியனை மெதுவாகக் கடக்கும்போது, வயல் வழியாக நிழல் பாய்ந்தோடியது (காதல்சாலை, பக். 242) "அவள் நிழல் பாதிகூடத்திலும், இடுப்பிற்கு மேல் எதிர்ச்சுவரிலும் விழுந்து சிறிது சிறிது ஆடிக் கொண்டிருந்தது" (காதல் சாலை, பக். 245) "என் வாழ்க்கை ஒரு உன்னத நிழல் ஆட்டம். ஒளி குன்றியது. என்னுடைய நிழலும் பார்வையினின்றும் மங்கிவிட்டது." (மாபெருங் காவியம், பக். 265). "சுவரில் ஆடிய நிழல்கள் இவன் மனதே போலச் சலித்தன." (மாபெருங் காவியம், பக். 268)

'கனவு' என்பதும், மிக முக்கியமான இடங்களில் வருகின்றது; அத்வைத அர்த்தத்தின் சாயையோடும் வருகிறது. சங்கரர் வகுத்தளித்த சித்தாந்தம்தான் அத்வைதம். 'அ-த் வைதம்' என்றால் 'இரண்டு இல்லை என்று அர்த்தம். சுவாமி (பிரம்மம்) என்கிற ஒரே சத்திய வஸ்துவுக்குப்புறம்பாக எதுவுமே இல்லை. அதுதவிர, இரண்டாவது வஸ்து எதுவுமே இல்லை. அந்த ஒன்றே தான் மாயா

சக்தியால் இத்தனை சீவர்கள் மாதிரியும் தோன்றுகிறது. மூன்று நிலைகள் உள்ளன. 'ஜாக்ரத் விழிப்புநிலை (சொப்பனம்) கனவு' 'சுசூப்த்தி'; ஒன்றும் தெரியாமல் தூங்குவது 'சுசூப்த்தி' இந்த மூன்று நிலைகளிலும் ஒருவனேதான் இருக்கிறான். கனாக் கண்டவனும் விழித்துக் கொண்டவனும் ஒருவனே. ஆனால், கனாக்கண்ட பொழுது நடக்கிறவைகளுக்கும், விழித்துக் கொண்டபின் நடக்கிறவைகளுக்கும் முன்னுக்குப் பின் சம்பந்தமே இல்லை. கனவில் வேறுவிதமான நடவடிக்கைகள் வருகின்றன. நிலை வேறுபட்டபோதிலும், மனோபாவம் வேறுபட்ட போதிலும் இரண்டிலும் ஒருவனே இருப்பது போல, வேறு வேறு மனோபாவம் கொண்ட பல பிராணிகளிடத்திலும் இருப்பவன் ஒருவனே; அவனே நாம் என்று தெரிய வேண்டும்.

''...கனவென வாழ்க்கை கொண்ட கௌரிக்கு அன்று மனது சரியாக இல்லை'' (சாவில் பிறந்த சிருஷ்டி பக். 52,) 'கனவு என்பதாக எண்ணி, அவன் மனது நிம்மதி கொள்ளவில்லை'' (மனக்கோலம், பக்.84) ''சிலசில நாட்களில் சூரியன் மறையுமுன்பே மேற்கிலிருந்து மேகத்திரள்கள் மேலோங்கிவிடும். அவன், இவைகளை, பார்த்து உணரும் உணர்ச்சிகள், இரவின் வருகையில் கொள்ளும் இன்ப மயமான கனவுகள்தான்'' (மனக் கோலம், பக். 88). ''அப்போது விழிப்பின்றி, தூக்கமின்றி சதா இன்பக் கனவின் வாழ்க்கைக் கொள்ளும்''. (குடை நிழல், பக். 183). ''உங்களை நான் இப்போது பார்ப்பதும் நேற்றைய என் கனவுதான் போலும்''. அவனை அவள் அணைத்துப் பேசியதெல்லாம் ஞாபகத்தில் நிற்காது மறக்காது விநோதக் கனவாகத்தான் சுந்தரத்திற்கு இன்பம் கொடுத்தது'' (குடை நிழல், பக். 185) 'தன் முன் வாழ்வெலாம் எவ்வெவ் வகை கொண்டதாகிறது என்று கனவின் நிழலென, உணர்விற்கப்பால் தோன்றி மறையக் கண்டான் போலும்'' (தவறு, பக்.230). ''எங்கேயோ தடுமாறியதான ஒரு கனவுத் தோற்றமாய் உணர்ந்தவன், தானே ஒரு கனவுத் தோற்றமெனவும் கண்டான் போலும்'' (தவறு, பக். 236). ''மயங்கிய எண்ணங்களில் தான் இன்பக் கனவு காண்பது?'' (நினைவுச் சுவடு, பக். 261) 'தன்னுடைய வாழ்க்கையை ஒரு இனிய கனவில் கழிப்பதாகவே கருதி அந்த எண்ணத்தில்தான் அவன் வாழ்ந்து இருக்க முடியும்'' (மாபெருங் காவியம், பக். 265). ''கனவில் காண்பதைவிட வெகுவிநோதமாகவே தன்னெதிரில் நடப்பவைகள் தெரிந்தன'' (மாபெருங்காவியம், பக்.270)

'காலம்' - என்றால் என்ன என்பதைப்பற்றி மேலை நாட்டு கீழைநாட்டு தத்துவஞானிகள் நிறையவே சிந்தித்திருக்கிறார்கள். 'காலம்' என்ற ஒன்று உண்டா? இல்லையா? அப்படி என்றால் அது

என்ன? இதுவரை ஒருமித்த முடிவு ஏற்பட்டதில்லை. காலம் - வெளி என்பதைப்பற்றி விஞ்ஞானிகள் நிறையவே எழுதியிருக்கிறார்கள். மௌனி காலத்தை எப்படிப் பார்க்கிறார் என்பது அவரது கதைகளில் முக்கியமாகிறது. 'காலம் அவள் உருவில் அந்தச் சந்நதியில் சமைந்து நின்றுவிட்டது'' (அழியாச்சுடர், பக்.40). ''நாளைக்குப் பின்னாலே நடக்கப் போகிறதெல்லாம் நேத்திக்கு முன்னாலே நடந்தது போல காலம் எல்லாம் தலைகீழே மாறப் போகிறது ஸார்!! (சாவில் பிறந்த சிருஷ்டி, பக். 53) ''நேற்று நடந்ததை ஞாபகப்படுத்திக் கொள்ளும் போது நடந்ததா என்பதாகிறது; நடக்கிறதோ எனில் அப்படியே காலமென்பதின்றி, காலத்தையும் மீறியதாகிறது.'' (மனக்கோலம், பக். 88). ''காலத்தைக் கையைப் பிடித்து நிறுத்திக் கனிந்த காதலுடன் தழுவினாலும், அது நகர்ந்து சென்று கொண்டேதான் இருக்கும்'' (பிரபஞ்ச கானம். பக்.99). ''காலம் விறைத்து நின்றுவிட்டது'' (பிரபஞ்சகானம், பக். 107) ''இறந்த காலத்தின் எதிரொலி இடைவிடாது அசரீரியாகக் கூப்பிடுவதாக எண்ணிக் கமலா கவனித்து நின்றாள்'' (நினைவுச்சுழல், பக்.115) ... இவர்களிடையே தோன்றிய அன்னியோன்னியம் காலத்தின் கட்டை மீறியதாக இருந்தது'' (சிகிச்சை பக். 121). ''மதில்சுவர் இடிபாட்டிற்கிடையில் முளைத்து இருக்கும் புற் பூண்டுகளை, காலம் தவறி மேய்ந்து கொண்டிருந்தன இரண்டொரு ஆடுமாடுகள்...'' (உறவு, பந்தம், பாசம், பக்.138) ''எனது மனது சரியில்லை; சரியில்லை என்றால் காலத்தை வீணில் கழிக்கிறேன் என்பது போலும். ஆனால் ஒன்றுசரி, நடந்த காரியத்தின் மதிப்பும் காலத்தின் விசேஷமும், ஒன்றுக்கொன்று பொருந்திக் கலவாமல், தாரதம்மியப்பட்டு, தனியாகத் தோன்றுகிறதே - அதுதான் சரி, தனித்தோற்றமும், மதிப்பும் விசேஷமும் ஒன்றுக்கும் கிடையாது. உணர முடியாது. காலம் கழித்தது வீண் என்ற பாவனைக்குக் காரணம் ஆராயும்போது பார்த்தாயா? அர்த்த மற்றவைகளாகத்தானே கொள்ள முடிகிறது'' (எங்கிருந்தோ வந்தான். பக். 160)

''தோற்றம்'' ''போலும்'' என்ற சொற்கள் பலவிடங்களில் வருகின்றன. ''நிற்கும் இடத்திலிருந்து வெகு சமீபத்திலேதான் ஆரம்ப - இறுதிகளின் எல்லை, மயங்கிய தோற்றம் கொடுக்கிறது'' (மனக்கோலம், பக். 90) ''சிற்சில சமயம் இருவரும் ஒருவொருக் கொருவர், சம்பந்தமற்ற தனி ஜீவன்கள் போலத் தோன்றுவது அவர்களது மிகமிக மர்மமான ஒற்றுமை வாழ்க்கையின் ஒருவிதத் தோற்றந்தான்'' (சிகிச்சை, பக். 121). எடுத்துக்காட்டாகத்தான் இரண்டுமட்டுமே கூறப்படுகின்றன. 'போலும்' சலிப்பூட்டும்படிக்கு

வருகிறது. மௌனி 'விதி' என்று சொல்லாமல் 'எதேச்சை' என்றே பலவிடங்களில் கையாளுகிறார். எடுத்துக்காட்டாக, "அந்த ஒட்டல் வாயிலில் அப்பெண்ணை யதேச்சையாகச் சந்திக்க நேர்ந்தது" (பிரக்ஞை வெளியில் பக். 69). "இப்போது உங்கள் பெயரும் சுசீலா என்பதில் யதேச்சை பெயர் ஒற்றுமை என்பதில் என்னென்னவோ என் மனது விநோதவிதத்தில் எண்ணுகிறது." (பிரக்ஞை வெளியில், பக்.72)... "உருவற்று... இடமற்று - தன்வழியே உலாவும் குணங்கள், நான், சுபாவம் எல்லாமே ஊடுருவத் துளைத்துச் செல்ல குறியென யதேச்சையில் குறுக்கிடுகிறது பெயர், உருக்கொள்ள".. (பிரக்ஞை வெளியில், பக். 78). "எவற்றையும் யதேச்சையில் கவனிப்பின்றிதான் நான் செய்கிறேன்" (குடைநிழல், பக். 177). "இப்படி ஏதாவது ஏதேச்சையில் புண்ணியம் வருமென்றாலும் அதைத் தூக்கிக்கொண்டு போகத்தான் தொடருகிறான் போலும்" (அத்துவான வெளி, பக்.201). "யதேச்சை குறுக்கீட்டு, சம்பவமென இப்போது கொள்ள முடியவில்லை" (தவறு, பக்.231).

மௌனியின் கதைகளில் 'சங்கீதம்' மிக முக்கியமான இடத்தைப் பெறுகிறது. ஒரு கதையின் பெயரே 'பிரபஞ்சகானம்' என்றிருக்கிறது. 'சங்கீதம்' பிரபஞ்ச சப்தம்' இவ்விருசொற்களையும் ஒரு பொருள் படத்தான் மௌனி கையாள்கிறார். அத்வைதியான காலம் சென்ற காஞ்சிப் பெரியவரிடமிருந்து ஒரு மேற்கோளினால், மௌனியின் பிரபஞ்சகானத்தைப் புரிந்து கொள்ளலாம். "எத்தனையோ கிரமத்துடன் இயங்கிவரும் இந்தப் பிரபஞ்சத்தைப் பார்க்கும்போது இதையெல்லாம் செய்கிற பேரறிவு ஒன்று இருக்க வேண்டும் என்று தெரிகிறது. அந்தப் பரமாத்மாவிடமிருந்துதான் நாம் பார்க்கிற சகல வஸ்துக்களும் நாம் கேட்கிற இத்தனை சப்தங்களும் உண்டா யிருக்கின்றன. முதலில் சப்தப் பிரபஞ்சம் ஆகாசத்தில் உண்டான பின்தான் நாம் கண்ணால் பார்க்கிற பிரபஞ்சம் உண்டாயிற்று. ஆகாயத்தில் இந்தச் சப்தங்கள் அனைத்தும் இருக்கின்றன. வெளிப் பிரபஞ்சத்திலிருப்பதெல்லாம் மனிதனின் உடலில் இருக்கின்றன." (தெய்வத்தின் குரல்: இரண்டாம் தொகுதி, பக். 264). "உள்ளம் கவரும் ஒரு கீதம் இவளைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டு கிட்டே நெருங்க பயம் கொள்கிறது" (சாவில் பிறந்த சிருஷ்டி, பக். 59) "விரல்களின்றியும் வீணையில் சங்கீதம் வியாபகம் கொள்ளும் போலும்! சுருதி விலகி எட்டியே நின்று இடைவிடாது முணுமுணுக்கிறது. சப்தத்தினின்றும் சங்கீதம் விடுதலை பெற்று எட்டிய வெளியில் மௌனமான வியாபகம் கொள்கிறது" (மனக்கோலம், பக். 85) "அதுமுதல், அவள் சங்கீதம் அவளுள்ளே உறைந்து கிடந்தது. ஒருதரம் அவள் வீணை

வாசிக்க அவன் கேட்டான். அதன்பிறகு அவளுடைய சங்கீதத்தைப் பற்றியும், பிரபஞ்சத்தைப் பற்றியும் அவன் அபிப்பிராயமும் உறுதியாகிவிட்டது. அவள் தான் சங்கீதம்; பிரபஞ்சகானம் அவளுள் அடைபட்டுவிட்டது என்று எண்ணலானான். காகத்தின் கரைதலும் குருவிகளின் ஆரவாரமும் மரத்திடைக் காற்றின் ஓலமும், காதுக்கு வெறுப்பாகி விட்டன. அவளுடைய சங்கீதம் வெளி விளக்கம் கொள்ளாததனால், இயற்கையே ஒரு வகையில் குறைவுபட்டது போலவும், வெளியில் மிதப்பது வெறும் வரட்டுச் சப்தம்தான் என்றும் எண்ணலானான்.''

''உலகமே குமுறி சங்கீத மயமானதாக நினைத்தான் (பிரபஞ்ச கானம், பக். 102)

''அவள் சங்கீதத்தின் ஆழ்ந்த அறிதற்கரிய ஜீவ உணர்ச்சிக் கற்பனைகள், காதலைவிட ஆறுதல் இறுதி எல்லையைத் தாண்டி பரிமாணம் கொண்டன'' (பிரபஞ்சகானம், பக். 106) ''ஐய்யோ... அதோ சங்கீதம் இனிமை, இன்பம் எல்லாம் திறந்த வெளியில் நி றைகிறதே... என்று கத்தினான்'' (பிரபஞ்சகானம், பக். 107). 'உலகப் பேரிரைச்சல், ஒரு உன்னத சங்கீதமாக ஒலித்தது (பிரபஞ்சகானம், பக். 108).''அவனுடைய மௌனம் கலைந்து சங்கீதமாக விகசித் திருக்கலாம்.. எட்டிய ஆசனங்களில் பல வர்ணப்பட்டு வஸ்திரத்தில் பதுமைகள் போன்று சமைந்து இருந்தவர்களை அநேக ஸ்வரச் சித்திரங்களாக அவன் கண்டிருக்கலாம். (நினைவுச் சுழல், பக், 114)

'மரம்' சில இடங்களில் குறியீடாக வருகிறது. ''எதிரில் மரம் கண்முன் நிற்க இவன் எங்கேயோ அந்தரத்தில் பறந்து அதன் மேல் உட்காரவோ ஆடவோ முடியாது, சுற்றுவதுபோல இருந்தது மன திற்கு குஷி கொடுக்க இருந்தது. (அத்துவான வெளி, பக். 202) 'பக்கத்தில் நின்ற அப்பெரிய மரமும் கரைந்து கத்திக் கொண்டு ஆடியது'' (அத்துவான வெளி, பக். 205) காலையில் வீட்டு வாசலில் மரம் நின்றிருந்தது - ஆகாயத்திற்கும் பூமிக்குமாக எட்டுத் திக்கும் பரவி - எந்நேரமும் சப்தம் கொண்டு வாவென்றழைக்கும் தோற்றத்துடன் (அத்துவான வெளி, பக், 207) ''வெகு தூரத்தில் கண்ட ஒரு தனிமரம் இவனுக்கு எல்லையைக் கொடுத்ததுபோன்று'' (கொஞ்சதூரம், பக். 220).

இந்து சமயத்தில்மட்டுமேதான் இப்பிரபஞ்சத்தை படைத்தவர் ஆண்பாலில் மட்டுமே அல்லாது பெண்பாலிலும் குறிப்பிடப் பட்டிருக்கிறது. அதனால்தான் 'இறைவன்' என்ற சொல்லும், 'இறைவி' என்ற சொல்லும் இருக்கின்றன. 'இறைவி' என்பதற்கு இறைவனின்

மனைவி என்ற அர்த்தம் கிடையாது. அதனால்தான் 'தேவி' வழிபாடு இருக்கிறது. 'தேவி' என்பது பெண்மையை குறிக்கும். தேவி என்பவள் 'மாயை' 'பிரகிருதி' 'சக்தி' இவற்றின் வடிவமாகும். 'மாயை' என்பதற்கு பல்வேறு அர்த்தங்களை இந்திய தத்துவங்களில் கொடுத்தாலும், அவை எல்லாம் பொதுவான ஓர் அடிப்படையைக் கொண்டிருக்கின்றன. அதாவது அறியாமையால், இல்லாத ஒன்றை இருப்பதாக மனம் எண்ணிக் கொள்வது. இவ்வுலகம் 'பிரகிருதி' 'புருஷன்' ஆகிய இருபொருள்களால் ஆனது. பிரகிருதி மாற்றம் அடைவது. புருஷன் மாற்றம் அடையாதது. மாற்றம், நிலைபேறு இரண்டும் உண்மை. சடவுலகிற்கு மூலகாரணம் பிரகிருதி. அது முக்குணங்களால் ஆனது. சக்தி என்றால் ஆற்றல் அல்லது வலிமை என்று பொருளாகும்.

மௌனியின் பெண் பாத்திரங்கள் எப்படியெல்லாம் மேலே சொல்லப்பட்ட குணங்களை அல்லது பரிமாணங்களை வெளிப் படுத்துகின்றன? ''மனதில் ஒரு சக்தி வேகம் கொள்ள அவள் முகம் தெளிவடைந்து காணப்பட்டது. உலகைத் தழுவும் 'பெண்மையை' விசுவரூபத்தில் கொண்டாள்போலும்'' (சாவில் பிறந்த சிருஷ்டி, பக்.57). 'விடுவிக்க முடியாத ஒரு மௌன ஜீவப் புதிர் போன்று விளங்கினாள்'' (பிரக்ஞை வெளியில், பக்.67) ''அவள் கல்யாணமாகாத கன்னிப் பெண். பெண்மை எனப்படுவது அவள்தான் போலும். எவ்வளவு பயங்கர சக்தி பெண்மை என்பது. உனக்குத் தெரியுமா? பெண் ணென்றால் ஒருவனுக்கு மனைவியாகத்தான் வேண்டும். பிருமாண்ட வெளியில் உருக்கொள்ளும் பெண்மையை, சட்டத்திற் குட்பட்ட சிறு கற்பலகையில், மனைவியென சித்திரம் வரைந்து இன்பமடையைப் பார்க்கிறான் கணவன், அவளிடம் பெண்மையைப் பார்ப்பதோ, பயம் கொள்ளுவதுதான்... என்ன கிட்டு, நீ எப்போ தாவது உன் மனைவியைக் கண்டு பயம் கொள்வது உண்டோ'' (பிரக்ஞை வெளியில், பக். 69). காளி, படைப்பின் அழிவு சக்தி யாகும். அடக்க முடியாதப்படுபவள். அதனால்தான் தன் கணவனான சிவனின் மார்பின்மேல் கோரத் தாண்டவம் ஆடுகிறாள். ''கல்யாணம் ஆக வேண்டிய பெண், தனக்குத் தெரியாத ஒருவனை எண்ணி, அவனுக்காகக் காத்திருப்பது போன்றதா, ஒரு மனைவி தன் கணவன் வருகைக்கு ஏங்கி எதிர்பார்த்து இருப்பது? கன்னியும், மனைவியும் வேறெனப்படுவதில், அதுமாதிரி இல்லாவிட்டாலும், இருவரும் பெண் என்பதில், அது போலவும் தோன்றுகிறது'' (பிரக்ஞை வெளியில் பக். 77) ''அவள் உள்ளே கிடக்கிறாள், படர்ந்த பிரபஞ்சத்தின் ஒளிமறைவில் ஒன்றி மறைய'' (மாறுதல், பக்.93).

இந்தச் சமயத்தில் அர்த்தநாரீசுவரத் தத்துவத்தை நினைவு கூர்வோம். தமிழில் 'மங்கையொரு பாகன்' என இது அழைக்கப்படுகிறது. அதாவது ஆண்மையும் பெண்மையும் சேர்ந்தவன்தான் கடவுள் என்ற கோட்பாடு. "சேகரனைப் பெண்ணென மதித்துத்தான், நான் பழகிப் பேசுகிறேன் போலும்! ஒரு பெண் பெண்மையின் சக்தியையா ஒரு ஆணிடம் உணர முடிகிறது? அதனால்தான், நான் அவனிடம் கொள்ளும் விருப்பும் வெறுப்பும்? அவனுக்கு என் பெயர் கொண்ட ஒரு மனைவி இருக்கிறாள். அவளையா, இவனிடம் நான் பார்ப்பது? அவள் பெண்மையை, இவன் சுவீகரித்துக் கொண்டுவிட்டானா?" (பிரக்ஞை வெளியில், பக். 79) "தனக்கென ஒரு வீடு, தனக்கென்று ஒரு மனைவி. தன் பலவீனத்தை உணர்ந்ததில்தான் மனைவி என்கிற பாத்தியம் கொண்டாட இடமேற்படுகிறது ஆண்களுக்கு.. பெண்ணோ எனில் தன் பலத்தை மறக்க, மறைக்கதான் மனைவியாகிறாள், ஒன்றிலும் கட்டுப்படாது தனியே எட்டி நின்று உற்றுப் பார்ப்பதே பெண்மையின் பயங்கரக் கருவிழிகள்தான் (மனக்கோலம், பக். 89). "அவளால் யோசிக்க முடியவில்லை. முடியாததையும் உணர முடியவில்லை. வட்டத்தைச் சுற்றிச் சுற்றி, ஆரம்ப இடமே முடிவிடமாகச் சுழன்று விரிவுபட்டு, சிறிது மனவெழுச்சி கொண்டு, பிறிதொரு சுழலில் அகப்பட்டாள். அகண்டத்தை பரிணமித்து நிற்கும் சுழற்சிக்கு விரிவுபட அவளுக்கு மூளை வன்மையில்லை. வேகமின்றிக் குழம்பும் சுழலில் அகப்பட்டு, தடுமாற்றத்தில் ஆதி நிலையிலும் அடிபட்டு போவதைத்தான் கண்டாள். தன் பெண்மையின் வீழ்ச்சியை நன்கு உணர்ந்து கொண்டாள்" (நினைவுச் சுழல், பக்.119). "பெண்மையின் சக்தி தோன்ற அவள் பார்ப்பவர்களுக்கு ஒரு இனிமை, கவர்ச்சி, ஒரு பயங்கரம் தோன்ற இருப்பவள் போல் ஒருவரிடமும் ஒட்டாது, வெகு சகஜமாக யாரிடமும் பழகுபவள்" (உறவு, பந்தம், பாசம், பக்.142) "ஆண்களின் தன்மை ஒருவரிடமும் ஒரு விதத்திலும் சரியெனப்படவில்லை. ஆண் பெண் பாகுபாட்டை, உலகே தவறாகக் கண்டு கொண்டிருக்கிறது. (உறவு, பந்தம், பாசம், பக். 147). "பெண்ணைப் படைத்த 'அவன்' பெண்மையையும் மறக்கவில்லை ( பக். 148)*

மௌனி, முறையாக தர்க்கத்தின் அடிப்படையில் நிறுவப்பட்ட எந்த தத்துவ முடிவுகளையும் ஏற்றுக்கொள்ளவில்லை. அத்வைதம்

*விட்டில் பூச்சிகள் போன்று விளக்கை வட்டமிட்டே அழிவதுதானா ஆடவர் வாழ்க்கை! கிட்டே நெருங்க கவர்ச்சி கொடுக்காது இருக்க எப்படி முடியும் பெண்களால்?" (சாவில் பிறந்த சிருஷ்டி, பக்.59)

கூட அவருக்கு ஏதோ இருட்டில் விளக்காக இருக்கிறதேயொழிய, இருட்டைத் துரத்தியடிக்கும் ஒளியாக இல்லை. அவர் மனம் உண் மையைத் தேடும்போதெல்லாம் தத்துவ முயற்சியாக வெளிப்படு வதைக் காணலாம். ''எவ்வளவு அபத்தமாகப்படுகிறது எல்லாம். ஒரு அல்பசித்தி கண்டு, தாங்க முடியாது, மேலேபோக வழிகாணாது, தவித்துக் கொந்தளிக்கும் மனோவியக்திகளின், இவ்வகை வெளி விளக்க ஆர்ப்பாட்டம், ஊர்கூட்டும் தமுக்கடி தமாஷா போன்று, எவ் வளவு அபத்தமாகப்படுகிறது. எவ்வித பிரமாண்ட தோற்றமும் ஒரு அல்ப சித்தியின், அல்ப பவிஷாசையின், வெளிவிளக்கமாகத்தானே, தோற்றம் கொள்ளுகிறது. இரவின் அந்தகார இருளைக்காண, ஒரு சிறு ஒளிப்பொறி போன்றாக முடியுமா, இப்பகல் தீவட்டிகளின் ஒளிகாட்ட முயலுதல்கள். எல்லாம் மாறி, மறைய, பாழடையத்தானே தோற்றம் கொள்ளுகிறது'' (மனக்கோட்டை, பக்.17)

''அவளுடைய கூப்பிய கரங்களின் இடைவழியாகக் கர்ப்பக் கிருக சரவிளக்குகள் மங்கி வெகுதூரத்திற்கு அப்பாலே பிரகாசிப் பதைக் கண்டேன். அவள் கண்கள், விக்கிரகத்திற்குப்பின் சென்று வாழ்க்கையின், ஆரம்ப இறுதி எல்லைகளைத் தாண்டி இன்ப மயத்தைக் கண்டு களித்தன போலும்'' (அழியாச்சுடர், பக்.40). ''நாம் சாயைகள் தானா...? எவற்றின் நடமாடும் நிழல்கள் நாம்?'' (அழியாச்சுடர், பக்.41) ''எல்லாம் ஒரு கனவுதானா?'' (மேலது, பக்.45) ''இருள் சுடரைக் கொண்டு விளக்காக முடியுமா?'' (சாவில் பிறந்த சிருஷ்டி. பக். 59). ''ஒளிபடராத பிரக்ஞை வெளியில் சேகரன் தடுமாறிக் கொண்டிருந்தான். தூக்கத்திற்கும் விழிப்பிற்கும் உள்ள எல்லைக் கோடு, பிளவு கொண்டு ஒரு சிறுவெளி விரிவு தெரிவது போலும் அந்நடுவெளியில் நின்று உலக விவகாரங்களைக் கவனித்தான். உலகம் உண்மையெனத் தோன்றுவதற்கு - வஸ்துக்கள் வாஸ்தவமெனப்படுவதற்கு மாயைப் பூச்சு கொள்ளுமிடம் அதுதான் போலும், தூக்கத்தில் மறையவும், விழிப்பில் மறக்கவும்...'' (பிரக்ஞை வெளியில் பக். 73) ''பட்டணச் சந்தடிகள், பொறுமையிழந்த கூக்குரல்கள் போன்று வீதி வழியே, யார் கவனிப்பிலும் படாது, போய்க் கொண்டிருந்தன. மோட்டார்கள் பறந்துசென்று மறைந்தன. தங்களை விட்டுச் சென்ற உயிரைப் பிடிக்க, நடைப்பிணங்களென, அநேகர் கடந்து சென்றனர். மற்றும் சிலர் தங்களை விட்டு, உயிர் ஓடாது இருக்க, அதைப் பிடித்துக்கொண்டு ஓட்டத்திலும் நடையிலும் சென்றனர். உருவங்கள், தெரிந்தும், மறைந்தும் சப்தங்கள் கேட்டும் கேட்காமலும், எல்லா சந்தடிகளும் ஒரு அலங்கோலத்தில் ஒரு புலனாகாத நியதியில் அவதிப்பட்டுச் சிதறிச் தெரிந்தன. இந்த உரு,

இந்த சத்தம், இந்தப் பெயர், இந்தத் தோற்றம், என்ற இசைவுமுறை நழுவி, தனித்தனியாக காணும் புலனுணர்வுகளை, மனது ஒப்புக்கொள்ள முடியவில்லை'' ( பிரக்ஞை வெளியில், பக்.75) ''வேதனைகளின் இன்பம்தான் வாழ்க்கை போலும்'' (பிரக்ஞை வெளியில். ப.82) ''கேசவனுக்கு வாழ்க்கை லட்சியம் என்பது என்ன வென்றே புரியவில்லை. உலகில் எத்தனையோ பேர் புரியாத வாழ்க்கை நடத்தும் விதமும் அவனுக்கு புரியவில்லை. அவன் மனோபாவம் வெகு விநோதமாகத்தான் அமையப்பெற்றது. அவன் பிறந்த வேளையின் கோளாறு போலும்! எந்த விஷயமும் இவ்வளவுதான் என்ற மதிப்பிற்கு அகப்பட்டு நிலைத்தால் அல்லாது அதன் தேவை எவ்வளவு என்பது புலனாகாது, நிலைகொள்ளாது இச்சைகள் மனவிரிவில் விரிந்துகொண்டே போனால், மதிப்பிற்கான துரத்தலில் தானாகவா இச்சைகள் பூர்த்தியாகின்றன? பிடிக்க முடியா தெனத் தோன்றும் எண்ணத்தில் இந்தத் துரத்திப்பிடிக்கும் பயனிலா விளையாட்டு எவ்வளவு மதியீனமாகப் படுகிறது. எல்லாம் தெரிந்தும் கூட அவனால் ஒன்றையும் செய்ய முடியவில்லை. இந்த மனவெறி யாட்டத்தில் களிகொண்டு எட்டிப்பார்த்து நிற்பவனா கடவுள்? அப்படியாயின் அவனை கேசவன் கருணையில் பார்க்க முடிய வில்லை. பிடிபடாத பைத்தியக்காரத்தனத்தில் தான் சிற் சில சமயம் அவன் அகப்படுவதான எண்ணம் அவனுக்கு... ''யோசனை களிலேயே ஒருவன் எப்போதும் வாழ்க்கையைக் கழிப்பது முடியாது. பசிப்பிணி முதலியவைகளின்றிக் காலம் கடத்தும் மிருக வாழ்க்கையாகத் தோன்றும் அது. தான் படைக்கப்பட்டவன் என்று எப்போதாவது உணரும் போது, ஏன், எதற்காக என்ற கேள்விகள் தானாகவே மனதில் எழும். இத்தகைய கேள்விகளை மனது விழுங்க வேண்டுமாயின், புறஉணர்வு மயமாகவும், காரணகாரியமற்று சம்பவங்களைக் கொள்ளும் விதமாகவும் தான் ஒருவன் இருக்க முடியும். எப்போதும் எவ்விதம் இவ்விதமாக இருக்கமுடியும் ஒருவனால்?'' (மனக்கோட்டை. ப.86,87 ) ''மனது, மாறுதலை மிக வேண்டும் நேரத்தில், உலகின் சந்தோஷத்தைவிட மனதைத் தாக்கும் துக்கம் வேறொன்றுமில்லை என்பதை அவன் உணர்ந்தான்; அவனுக்கு சந்தோஷமே கிடையாது. வெறுப்புத்தான் அவன் மனதில் நிறைந்திருந்தது'' (பிரபஞ்சகானம்.ப.100) ''எவ்வகை நிகழ்ச்சியும் விநோதமாகத் தோன்றாமல் போவதில்லை. எதுவானாலும் மனோ கற்பிதமான அனுபவத்திற்கு அகப்பட்டாலும் அனுபவபூர்வமாக நிகழ்ச்சிகளை உணருவது வேறு மாதிரியாகத்தான் இருக்கிறது. நடந்ததைப் பற்றியோ, நடக்கப் போவதைப் பற்றியோ, நான் ஒன்றும்

யோசிக்கவில்லை. களையின்றி எல்லாம் ஏதோ கனவு போலத்தான் தெரிகிறது.'' (சிகிக்சை ப.132) 'அர்த்தமற்று இவைகள் மனத்தை இன்பமயமாக்கின. அளவுக்கு மீறிய அதிக இன்பத்திலும், உணர்வு சோர்வு கொள்ளா வகையில், கமலா கேட்டு நின்றாள்''(பக்கம்,116) ''உலகிலே ஒளிக்கப்பட்டவனே போன்று இருத்தலை மிக வேண்டினான். ஆனால் இப்போது எங்கு ஒளிந்து கொண்டிருக்க முடியும் என்பதுதான் புரியவில்லை. போவதாகத் தோன்றும் இடமோ எல்லையற்றதாக இருந்தது. செய்ததைத் துடைத்து மறைக்கும் வல்லமை இல்லாததினால் தான் செய்த ஒவ்வொரு காரியங்களின் மதியீனத்தையும் கண்டான்.'' (நினைவுச் சுழல் ப.117)

''எதிர்பாராச் சம்பவம், விபத்தென அடிக்கடி ஆபத்தில் சிக்கவைக்க, வாழ்வுதான், தவிப்பில் எவ்வளவு அபத்தமென பெரும் பாடாகிறது'' (தவறு ப.233)

''ஆனால் என் முன்னும் பின்னும் தெரிவதுதான் என் மனதில் மறையவில்லை. நான் மட்டும் சாசுவதத்தில் நிற்கப் போகிறேனா? நான் நிற்குமிடம் சூனியமாகிறது. நான் இருப்பது அதுவும் ஒரு பெரிய பொய்தானே. நிற்கும் பொய்யைத்தானே நிஜமெனக் காணப் பக்கத்தில் வருகிறார்கள். பொய்யை நம்பும் நீயும் இறக்கப் போகிறாய், இறப்பைத்தவிர உலகில் நடக்கிறது எது நிஜம்? இறப்பில் தான் மனித வாழ்க்கை பூர்த்தியாகிறது.''

''நீ உன் இறப்பிலும் நிஜமாக மாட்டாய். இறந்த உன் வாழ்விலும் கனவுகள் உண்டு. கனவில் மிதக்கும் நீ, உனக்கு எது இறப்பு, விழிப்பு? உனக்கு சாவு இல்லை. சாவினால் நீ சமாதானம் அடைய முடியுமா?'' என்றான் சுந்தரம்.

''அதோ அங்கே பார் பூமியின் கீழ் ஐந்தடிக்குக் கீழ் சிறுபுல் என்மேல் படர்ந்தால், இனிமையான பக்ஷிகள் என் மேல் பாடினால், வெளியுலகம் அப்போது பாழடைந்து மடியும். இரவின் வானக் கூரையில் அநேக நக்ஷத்திரங்கள் தெரியும். என்மேல் மெல்லிய காற்றுத் தடவிச் செல்லும் - என் இன்பக் கனவுகளைத் தவிர ஒன்றும் என்னைத் தொடர்ந்திட முடியாது. அப்போது விழிப்பின்றி, தூக்கமின்றி சதா இன்பக் கனவின் வாழ்க்கைக்கொள்ளும். நான் - எனக்கு எது மெய்யானால் என்ன? பொய்யானால் என்ன?''(குடை நிழல். ப.182-183) ''குறிப்பற்ற போக்கில் போவது, நிச்சயமாக வேண்டி எல்லை விரிந்த வெளியென எங்கெங்கேயும் ஒளிகிறதாகிறது.'' (தவறு.ப.234) ''ஒன்றையும் கவனியாது இயற்கையின் சக்கரம் காலத்தில் சுழன்றுகொண்டு இருந்தது.

உலகத்தில் மாந்தர்கள் கொள்ளும் மனச்சாயையைக் கொஞ்சமும் பொருட்படுத்தாது இப்பிரபஞ்சம் துயின்று கொண்டு இருப்பது கிட்டு வுக்குப் புரியவில்லை. வாழ்க்கையின் இன்பதுன்பம் தன்னுடைய மனத்தில் தான் தோன்றுகிறதா என்ற ஒரு எண்ணம் கொண்ட போது ஆறுதலுக்குத் தன்னைத்தவிர வேறிடம் தேடுவது மதியீனம் என்பதாக நினைத்தான்"(மாபெருங் காவியம்.268)

மௌனியின் கதைகளில் வரும் பெண்கள் தாசிகள்(மாறாட்டம்) (அழியாச்சுடர்') (உறவு, பந்தம், பாசம்,) (அத்துவான வெளி') (தவறு)- விலைமகளிர் ( 'நினைவுச்சுழல்' 'குடைநிழல்' 'காதல் சாலை' சிகிச்சை' 'மாபெருங்காவியம்' ஏன்?) இவரின் ஆண் பாத்திரங்கள் அநேகமாக எல்லோருமே ஏதோ ஒரு காரணத்தினால் துயருற்று இருக்கிறார்கள். பெண்களும் அப்படித்தான். தாசிகள் - குறிப்பாக கோயில் தேவதாசிகளை புரிதலோடு அணுகினாலும், மௌனி குடும்ப நிறுவனத்தை மனித சமுதாயத்திற்கு இன்றியமையாததாகவே எண்ணு கிறார். "குடும்பம் என்பது சமூகத்தின் எவ்வளவு அடிப் படையான அஸ்திவாரம் என்பது அவருக்குத்தெரியும்....உலகம் சீர்கெட்டுச் சிதைவுபடுவதின் காரணம் குடும்ப வாழ்க்கையில் சமாதானமற்று இருப்பதுதான் என்பதை ஸ்பஷ்டமாக அறிந்தார்....ஒரு விசித்திர யந்திரம்தான் குடும்பம் என்பது." (குடும்பத் தேர், ப.217) குடும்பத் தேரில் வரும் கிருஷ்ணய்யரின் தாயாரின் சித்தரிப்பு மிக அருமை யானது. மரபை விட்டு விடாமலும் அதே சமயத்தில் காலத்திற்கேற்ப மாற்றத்தையும் கொள்ளவே வேண்டியதற்கு நல்ல எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது இப்பாத்திரம் "விவேகமான இயற்கை அறிவு கொண்டு அவள் நடத்திய குடும்ப வாழ்க்கை, வீடு நிறைந்த ஒரு சுடரொளி போன்றது." 'நாகரீகத்தையும், நாகரிகத்தில் ஜனங்கள் முன்னேற்றத்தையும் அவள் கண்டு கொள்ளாமல் இல்லை. கண்டு கொண்டு அவைகளைப் பயன்படுத்தும் வகையில் தான் வித்தியாசம். சூன்ய மூளையில் அழகற்று மிருக வேகத்தில் தாக்குவது போன்று நவநாகரிகம் அவளிடம் தன் சக்தியைக் காட்ட முடியாது. எத்தனையோ தலைமுறையாகப் பாடுபட்டுக் காப்பாற்றி வரப்பட்ட, மிருதுவாக உறைந்த குடும்ப லஷியங்கள் உருக் கொண்டவள் போன்ற வள்தான் அவள். வெற்று வெளியிலும் தாழ்ந்த இடத்திலும் பாய்வது போலவன்றித் தணிவு பெற்று, அழகுபட, அமைதியுடன் தான் நாகரிகம் அவளிடம் இசைவு கொள்ளும். திடீரென்று தோன்றும் பச்சை எண்ணங்களையும், பழக்க வழக்கங்களையும் பதனிடாமல் ஏற்று வழங்குவது முடியுமோ குடும்பங்களினால்?" (குடும்பத்தேர் ப.208, ப.215)

# 5

# மொழி நடையும் சொல்லும் பாணியும்

மௌனியின் தமிழ் நடைக்கு இணையாக வேறு எழுத்துகள் அவருக்கு முன்பும் அல்லது பின்பும் இல்லை. முழுக்க முழுக்க தனித்தன்மை வாய்ந்ததாக அது இருக்கிறது. என்றும் நகல் எடுக்கமுடியாத நடையும் பாணியும் அவருடையது. தனித்த மொழிநடையும் ஆழ் மனத்தின் நினைவோட்டங்களை வெளிப்படுத்தும் யதார்த்தமும்; கவிதைச் செறிவுள்ள இடங்களும்; தற்குறிப்பு ஏற்ற அணி அல்லது உயிர் குறிப்பேற்றமும்; முரண்பொருள் சேர்க்கைகளும் இவரது கதைகளில் விரவிக்கிடக்கின்றன.

மௌனியின் மொழிநடையில் ஓர் அசாதாரணத்தன்மை காணக் கிடக்கிறது. பலமுறை மீண்டும் படிக்க வேண்டி யிருக்கிறது. ''என் கற்பனையில் பிறந்து, அவர்கள் மனதில் நீ வாழ்வது, எவ்விதமோ தெரியவில்லை'' (மனக்கோட்டை.ப.11) ''தான் அவன் எண்ணத்தில் எப்போதும் இருக்காமல் இருக்கமுடியாது என்பதும் இவன் எண்ணம்போலும்'' ''புதைவு கொண்ட அமைதி, விட்டுவிட்டு, விம்முதலில் காணும் மௌனக்குமுறலின், ஓலமென எல்லாவற்றையும் பார்த்து சிறிது நின்றிருந்தான்'' ''ஒரு பெரிய பொட்டல், வெட்ட வெளிப்பிரதேசம். ஆங்காங்கே, சின்னதும் பெரிதுமாக அநேக குன்றுகள் சிதறித் தெரிந்தன. எட்டிய வெளி வரையில், கட்டான் தரையும், சிலசில இடங்களில் பசும்புல் பூமி, மரம்மட்டைகள், சிறுபுதர்கள் ஆகிய வகைகளும் ஒன்றுகூடி, ஒரு பிரமிப்பை கொடுக்கும் வகையில் தெரிந்தது. தனித்தனியாக ஆடுமாடுகளும் , இரண்டொரு மனிதர்கள்,எட்டிய வெளியில் மந்தையென ஆடுமாடுகள் அசைவுத் தோற்றம்.... ஆகியவைகள் அகண்ட வெளியில் கரையாது தோன்றியது.'' (மனக்கோட்டை ப.10. ப.13 ப.14) ''இப்போது யதேச்சையாகவா, வந்து சேர்ந்தேன்? இல்லை என் வாழ்க்கை அவன் கற்பனையில் என்பதில் அவர்களும் கூட

இருப்பது, உங்களுக்குத் தெரியவில்லை, இப்போது? - நான் இருப்பதில் - " என்றான். "சங்கர் இறக்க முடியும், என் வாழ்க்கையை என்னை, கனவு காணாது இருக்கமுடியாது, அவன் கனவில், நனவென வாழ்க்கை கொள்ளும் நான் இருக்குமளவும் அவன்?...அவனை நாடி அவன் கனவை நாடி சுமி போகமுடியும் என்னைவிட்டு.... (மனக்கோட்டை ப.24,25) "என் நண்பனின் பழக்க வழக்கங்கள் மூலமாகவே, நவநாகரீகம் வெளி விளக்கம் கொள்வதென்ற அபிப்பிராயம் எனக்கு உண்டு. அவனுடைய ஒவ்வொரு செய்கைக்கும், எண்ணத்திற்கும், மாறாக நாசுக்கற்ற விதத்தையும் அவன் கண்டு கொண்டு, அவைகளை விலக்காமலில்லை. ஆனால் அப்போது எவ்வித விருத்த விஷயங் களுக்கும் தலை சிறந்ததாக அவன் மனத்தில் வெறுப்படையும்படி நின்றது" (மாறாட்டம், பக்.27) "காரணமற்றே நடந்த காரியமும், காரணம் கொள்வதற்கு வேண்டி, காரணம்தான் போலும்" (அழியாச்சுடர், பக். 39). "அவள் மனது சுலபமாகக் கண்டறிவதற்கு அகப்படுவதில்லை. பிறருக்கு ஒன்றையும் நிச்சயம் கொடுக்காத வகையில் தான் அவள் போக்கும் பேச்சும் இருக்கும்" (சாவில் பிறந்த சிருஷ்டி, பக். 48) "அந்த இரவின் இருளில்தான் அந்த மலரின் மணம் கனிசம் கொள்ளுகிறது" "சப்தத்தினின்றும் சங்கீதம் விடுதலை பெற்று எட்டிய வெளியில் மௌனமான வியாபகம் கொள்கிறது" "உறங்குவதற்கு இரவு அவனுக்கு உறுத்தாத பாயாக விரியவில்லை. புரண்ட விழிப்பிலோ வேலை கொள்ளப் பகலில்லை" (மனக்கோலம், பக்.85-86) "உங்களைத் தனியாக உங்களுக்காகவே நான் உங்களை மணக்க வில்லை. என்னுடைய மனதைக் கவர்ந்து ஆட்கொண்ட கமலாவின் நினைவு ததும்பி இருக்கும் உங்களைத்தான் நான் காதலித்து மணம் செய்து கொண்டேன். (சிகிச்சை, பக்.134) "ஞாபகம் காண, மறதியைத் தேடுவதில் ஜடமென இவன் அவ்விடத்திலேயே வீற்றிருந்தான்" "கடந்த காலம் பிளவு கொண்டது எனத் தோன்றா வகைக்கு, நேற்றுக் கூடத்தான் இங்கு வந்ததான எண்ணம் கொடுக்கும் வகைக்கு, அவ்வீடு பழைய நிலைமையிலயே தோன்ற இருந்தது" "தன்னை விடுவித்துக் கொள்ள கௌரியைவிட்டு வெளிச் செல்வதும் மனதுக்குப் பிடித்தமாக இல்லை" (உறவு, பந்தம், பாசம், பக்.139, 141, 147). "பேசிய பிறகு ஏன் பேசினோம் என்ற மனக்குறை ஏற்படுவது எல்லோருக்கும் உண்டு. ஆனால் கௌரிக்கு அதுமாதிரி தோன்றவே முடியாது. அவள் பேசியது அவள் பேசினதாகவே தோன்றாது சப்தம் கொள்ளுகிறது" (உறவு, பந்தம், பாசம், பக்.145). "அவள் பேசாத வார்த்தைகள் அருத்தம் கொள்ள, புருவத்திடைப்

புகுந்து கொண்டன போலும்'' ''யோசனைகள் யோசிக்கும்போது யோசிக்கப்படுவதினாலேயே மாறுதல் அடைகின்றன'' (குடைநிழல், பக்.175-76) ''அவள் இறந்ததை எண்ணும்போது தன் பலவீனத்தைக் கண்டார்'' (குடும்பத்தேர், பக்.214), ''முதல் நாள் இரவிலிருந்து கொண்ட மன இருள், இரவில் இருளில் சிறிது ஆறுதல் கொண்டது போன்று இவனை அவ்வளவு துன்புறுத்தவில்லை'' (கொஞ்ச தூரம், பக்.220) ''உலகு அவளை எவ்வளவு ஏளனமாக ஏற்க, தன்னைக் கலந்து இன்பம் காண, என்பதில் கண்ட கண்ட இடத்தில் கண்ட கண்டவர்களை மகிழ்விக்க தன்னை ஈனமாக்கிக் கொண்டவளா என்ன?'' ''...தன் தலைமயிரைப் பிடித்தே தன்னைத் தூக்கிக்கொண்டு சென்று விடமுடியும் என, கோதிக்கொண்டான் போலும்'' (தவறு, பக்.231, 237).

ஆழ் மனத்தின் நனவோட்டங்களை வெளிப்படுத்தும் 'சர்ரியலிச'ம் ஆங்காங்கே காணக்கிடக்கிறது. மௌனிக்கு, 1920களில் ஆந்திரே பெர்தான் பிரான்சில் தோற்றுவித்த 'சர்ரியலிச' இயக்கம் பற்றி அறிவதற்கு வாய்ப்பில்லை. அவ்வியக்கம் மனத்தில் தோன்றிய எண்ணத்தை அப்படியே வெளிப்படுத்துவதற்காக ஏற்பட்டது. ஆந்திரே பெர்தான் அது மனிதனின் மனத்தை விடுவிக்கும் புரட்சி என்றார். சர்ரியலிச இயக்கத்தின் நோக்கம் புற எதார்த்தத்தை அக எதார்த்தத்தோடு இணைப்பது. அறிவைப் பெறுவதற்கான உண்மையான வழிகள், கனவுகளை ஆராய்வதிலும், மனப் பிரேமைகளின் தன்மையை அறிவதிலும், ஆழ்மனத்திற்கு அடிபணிந்து தான்தோன்றியாக எழுதுவதிலும் இருக்கின்றன என்றனர் சர்ரியலிசவாதிகள். தான்தோன்றி எழுத்தானது - அழகியல் அல்லது அறிவின் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலை பெற்றதினால் - அடிமனத்தின் இயக்கங்களை வெளிக்கொண்டு வருகிறது. பழக்கங்கள், சமூக ஒழுகலாறுகள், கல்வி - இவற்றின் தணிக்கைக்கு உட்படாத மனித மனத்தை வெளிக் கொணர்வதே சர்ரியலிசமாகும். இதுதான் மனிதனுக்கும் பிரபஞ்சத்திற்குமுள்ள உண்மையான உறவை வெளிப்படுத்துவதாகும். மனத்தின் ஒரு பக்கத்தில், வாழ்வும் மரணமும், எதார்த்தமும் கற்பனையும், இறந்தகாலமும் எதிர்காலமும், வெளிப்படுத்த முடிவதும் வெளிப்படுத்த முடியாததும் உயர்வும் தாழ்வும்,- முரண்பாடு அற்றவை என உணரப்படும். எந்த அளவுக்கு சர்ரியலிச சாயல் மௌனியின் கதைகளில் காணப்படுகின்றது என்பதைப் பார்ப்போம்.

''மூளை மட்டும் இடம்விட்டு எங்கேயோ வெகு தூரத்தில் உலாவச் சென்றதுதான்'' (மாறாட்டம், பக்.31) ''என் வாக்கின்

அழியாத சாட்சியாக அமைந்து நின்ற அந்த யாளி எழுந்து நின்று, கூத்தாடியதைத்தான் நான் பார்த்தது'' (அழியாச்சுடர், பக்.45) ''அநேகர் தன்னை விட்டுவிட்டு, எட்டி தன் தலையை மட்டும் சுமந்து கொண்டு எங்கேயோ சென்று கொண்டிருந்தனர்'' (சாவில் பிறந்த சிருஷ்டி, பக்.59) ''ஒன்றும் புரியாமல் தலைமயிரைக் கோதிக்கொண்ட போது தன் தலையைக் காணவில்லை. சதியாலோசனைக்காரர்களிடம் விட்டு வந்தது ஞாபகம் வந்தது. எதை தனக்குத் தெரியாததை எழுதி தலைக்குள் புகுத்தி விடுகிறார்களோ என்ற பயத்தில் நின்று கொண்டாள்'' (சாவில் பிறந்த சிருஷ்டி, பக்.60) ''பின்னின்று யாரோ அவனை அணைத்ததென உணர்ந்த ஒரு இன்பம்... ஆதாரமற்று, நினைப்பதிலும் அதிர்ந்து இடிய, வடிவாகும் கற்பனைக் கோட்டை... அணைத்த கை சர்ப்பமாக அன்றோ அவன் மேல் நெளிந்தது. ஆம் சர்ப்பம் ஒன்றல்ல. சர்ப்பங்கள் அவன்மேல் சுற்றி, ஆசை கொண்டு, அவன் முகத்தை முகர்ந்து நக்கி முத்தமிடும் ஆர்வத்தில் - நீட்டிவிழுங்கும் அவைகளின் நாக்குகள் - அவை ஒளிக்கதிர் ஈட்டிகளா!'' (மனக்கோலம், பக்.90) ''கோபித்து, வானில் அந்த நட்சத்திரங்களைத்தானே வாரி இறைத்தவன் போன்ற உரிமை உணர்ச்சியுடன் அவற்றைப் பிடுங்கி, கடலில் ஆழ்த்த எண்ணுவான். அந்தப் புதிய ஸ்தானத்தில், அவை எவ்வகையாகுமென்ற சந்தேகம் கொண்டவன்போல அண்ணாந்து நோக்குவான். அவையும், அதே ஐயம் கொண்டு விழிப்பது போன்று அவனுக்குத் தோன்றும்'' (பிரபஞ்சகானம், பக்.99). ''வாய் விரிந்து நின்ற ஒரு மேகக்குகையில் மேலிருந்து இறங்கிய நீண்ட வெண்மையானதொன்று புகுந்து அதனுடன் கலந்து ஒரு உருக்கொள்ளலாயிற்று, மிக அற்புதமான உன்னத ஜீவகளை கொண்டு...'' (பிரபஞ்சகானம், பக்.100) ''இறகு முளைக்கத்தான் பக்ஷிஜாலங்களுடன் கூடி அந்த மரத்தில் கத்திக் கொண்டு இருக்கலாம் என நினைத்துத் துள்ளி நடக்கலானான்.'' (அத்துவான வெளி, பக்.203). ''அவள் ஞாபகம் வந்தது! 'காதலி எங்கே - ஏன் நான் காதல் மணந்தானே புரிந்து கொண்டேன்? அவளும் என்னைக் காதலித்தாளே! எங்கே அவள்? அவள் எருக்க மொட்டில்தான் இருக்கிறாள். நசுக்கினால் வெளி வருவாள், மறுபடியும் மிஞ்சின மொட்டுகளை நசுக்கினான். மொட்டுகள் இல்லை, சப்தமும் இல்லை. அவளையும் காணோம்'' (காதல் சாலை, பக்.243)

கவிதையாக வரும் இடங்கள் - ''ஆகாயத்தில் இல்லாத பொருளைக் கண்மூடி, கைவிரித்து தேடத் துளாவுவதைப் பார்த்தாயா? ஆடி அசைந்து நிற்கிறது அது; ஆட்டம் ஒய்ந்து

நிற்கவில்லை, மெல்லெனக் காற்று மேற்கிலிருந்து அடிக்கும். காதல் முகந்த மேகங்கள், கனத்து, மிதந்துவந்து அதன் மேல் தங்கும்... தாங்காது தளர்ந்து ஆடும்.. விரிக்கப்பட்ட சாமரம் போன்று ஆகாய வீதியை மேகங்களினின்றும் சுத்தப்படுத்துவதா அது?" (அழியாச் சுடர், பக். 37). "பகல் ஒளி பாதிக்கு மேல் உட்புகத் தயங்கும் உள்ளே, இரவின் மங்கிய வெளிச்சத்தில் சிலைகள் ஜீவகளை கொண்டு நிற்கின்றன. ஆழ்ந்த அனுபவத்திலும், அந்தரங்கத்திலும் மௌன மாகக் கொள்ளும் கூடமான பேரின்ப உணர்ச்சியை வளர்க்கச் சிற்பித்ததுதானா கோவில்கள்? கொத்து விளக்குகள் எரிந்து கொண்டிருக்கும், அதன் பிரகாரத்தில் நடமாடும் பக்தர்களுக்கும் அவர்கள் நிழலுக்கும் வித்தியாசம் காணக்கூடாத திகைப்பைக் கொடுக்கும் அச்சந்நிதானம், எந்த உண்மையை உணர்த்த ஏற்பட்டது? நாம் சாயைங்கள்தானா?... எவற்றின் நடமாடும் நிழல்கள் நாம்?" (அழியாச்சுடர் , பக். 41) "வெகுகாலமாக ஜோதி கொண்டு ஜொலிப்பது போன்று நிசப்தத்தில் தனிமையாக ஒரு பெரிய சுடர் விளக்கு மட்டும் லிங்கத்தருகில் எரிந்து கொண்டிருக்கும். அது திடீரெனச் சிறிது மறைந்து பிறகு பழையபடியே அமைதியில் தெரிந்தது. யாரோ ஒரு பக்தன் கடவுளை வழிபட உள் சென்றான் போலும். நான் மெதுவாகப் போய்க் கொண்டிருந்தேன். உலகின் கடைசி மனிதன் வழிபாட்டை முடித்துக் கொண்டு, அநந்தத்திலும் அவியாத ஒளியை உலகில் விட்டுச் சென்றதுபோலத் தோன்றியது அந்த மறைவும் தோற்றமும். தூண்டப்படாது அணையவிருந்த என்னுள் எரிந்த ஒளி நிமிர்ந்து ஜொலிக்கத்தான் நேற்று இது நிகழ்ந்தது" (அழியாச்சுடர், பக்.44) "அதோ மரத்தைப் பார், அதன் விரிக்கப்பட்ட சிப்பிக் கோடுகள், அதன் ஒவ்வொரு ஜீவ அணுவும் வான நிறத்தில் கலப்பது காணாது தெரியவில்லையா? மெல்லென ஆடும்போது அது வான வெளியில் தேடுகிறது. குருட்டுத்தனமாகத் தானே அங்கே தேடுகிறது" (அழியாச்சுடர், பக்.46)

"சிற்சில சமயம், இயற்கையின் விநோதமான அழகுத் தோற்றங்கள் மனத்திற்குச் செல்லும் நேர்பாட்டையைக் கொள்ளும் போது, தன்னை மறந்து அவன் மனம், ஆனந்தம் அடைவதுண்டு. மற்றும் சிற்சில சமயம், தன்னால் கவலைகளைத் தாங்க முடியாது என்று எண்ணும்போது, தன்னைவிடக் காற்று அழுத்தமாகத் தாங்கும் என்று எண்ணித் தன் கவலைகளைக் காற்றில் விடுவான். ஆனால் சூல்கொண்ட மேகம் மழையை உதிர்ப்பதே போன்று, அவை காற்றில் மிதந்து பிரிந்து, உலகையே கவலை மயமாக்கிவிடும். எட்டாத தூரத்தில் வானில் புதைந்து, கேலிக்கண் சிமிட்டும் நட்சத்திரங்களைப்

பார்க்கும்போது, அவனது பாழ்பட்ட பழைய வாழ்க்கை நினைவு எழும். கோபித்து, வானில் அந்த நட்சத்திரங்களைத் தானே வாரி இறைத்தவன் போன்ற உரிமை உணர்ச்சியுடன் அவற்றைப் பிடுங்கி, கடலில் ஆழ்த்த எண்ணுவான். அந்தப் புதிய ஸ்தானத்தில், அவை எவ்வகையாகுமென்ற சந்தேகம் கொண்டவன் போல அண்ணாந்து நோக்குவான். அவையும், அதே ஐயம் கொண்டு விழிப்பது போன்று அவனுக்குத் தோன்றும்.''

''மாலை வேளையில், வீடுகளின் மேற் பாகத்திலே சாய்ந்த சூரியக் கிரணங்கள் விழும்போது, இரகசியக் குகைகளின் வாய் போன்று, இருண்ட உள்பாகத்தை வீட்டின் திறந்த வாயில்கள் காட்டி நிற்கும். அது 'வா' வென்ற வாய்த்திறப்பல்ல. உள்ளே சென்றதும் மறைந்துவிடும் எண்ணங்களை விழுங்க நிற்கும் அசட்டு வாய்த்திறப்புப் போன்றுதான் தோற்றமளிக்கும்.''

''அவன், அந்தரங்க குகையில் மறைந்த எண்ணங்களோ வெனில், பழுக்கக் காய்ந்த சூட்டுக் கோலால், எழுதப்பட்டனவே போன்று அடிக்கடி எழுந்தன. மழுங்கி மறைந்திருந்த அந்த நினைவுகளை மிகுந்த அனல் கொண்டு ஜொலித்து எழச் செய்ய அவனுக்கு ஒரு சிறிய குழந்தையின் அழுகை போதும். ஒரு காகத்தின் கரைதல் போதும்.'' (பிரபஞ்ச கானம், பக்.98-99).

''இரவின் இருளைத் திரட்டி அடிவானத்தில் நெருப்பிடப் பட்டதே போன்று கிழக்கு புகைந்து, சிவந்து, தணல் கண்டது... காலைச் சூரியன் உதித்தான்... உலகப் பேரிரைச்சல், ஒரு உன்னத சங்கீதமாக ஒலித்தது. மனத்தில் ஒரு திருப்தி - சாந்தி. அவன் வீடு அடைந்தான்'' (பிரபஞ்சகானம், பக்.108)

தற்குறிப்பேற்ற அணி அல்லது உயிர்குறிப்பேற்றம் என்ற ஓர் இலக்கிய உத்திவகை உண்டு. அதாவது உலகின் உயிரற்ற பொருள்கள் மானுட உணர்வைப் பெற்றதாகச் சித்தரிப்பது. மௌனியின் சிறுகதை களில் அநேக இடங்களில் இவ்வகை உத்தி கையாளப்படுகிறது. இந்த உத்தி அதிகமாக பயன்படுத்துவதற்கு ஆதாரமாக இருந்தது மௌனியின் அத்வைத மனோபாவம் என்றுதான் சொல்ல வேண்டும்.

''தனிப்பட்டு, தலைவிரி கோலத்தில் நின்று, மௌனமாக புலம்புவது போன்று அம்மரம் எனக்குத் தோன்றியது. ஆகாயத்தில் பறந்து, திடீரென அம்மரக்கிளைகளில் உட்காரும் பட்சிகள், உயிர் நீத்தனவையே போல், கிளைகளில் சமைந்து ஒன்றாகும். அவற்றின் கூவல்கள், மரண ஒலியாக, விட்டுவிட்டுக் கேட்டுக் கொண்டிருந்தது. சிறிது சென்று, ஒன்றிரண்டாக, புத்துயிர் பெற்று கிளைகளைவிட்டு சிவ்வெனப் பறந்து சென்றன'' (அழியாச் சுடர், பக். 36).

"தன்னைப் போன்றே திகைத்து வீதிமரங்களும், வீடுகளும் நகர முடியாது நின்றிருப்பதை சேகரன் பார்த்தான்" "எதிர் பங்களாவி லிருந்து நாய் குரைப்பு சத்தம் கேட்டது. எதிரொலியில் அப்பங்களாவே நாயெனக் குரைப்பது போன்றிருந்தது" "மேற்கே சூரியன் மறையவிருக்கிறான். உலகமே ஒரு லேசான மஞ்சள் காவித் தோற்றத்தில் ஒரு வரட்டு விரக்தி கொள்ளுகிறது" "பட்டணச் சந்தடிகள், பொறுமையிழந்த கூக்குரல்கள் போன்று வீதிவழியே, யார் கவனிப்பிலும் படாது, போய்க் கொண்டிருந்தன" (பிரக்ஞை வெளியில், பக்.74) "யதேச்சையில் குறுக்கிடுகிறது பெயர், உருக்கொள்ள?" (பிரக்ஞை வெளியில், பக். 78) "அவ்வித எண்ணம் சூனிய வெளியில் நின்று கொண்டிருப்பது போன்று தோற்றம் கொண்ட தனக்கும் ஒரு இடமளிப்பதென உணர்ந்தாள்" "சாவு' யாவரையும் விட முன்சென்று பிடித்துக் கொண்டது". "பெயர் கொண்ட ஒன்று, தன் உருவை, சுமையெனக் களைந்து, பெயரெனத்தான் எட்டிய வெளியில் லேசாக மிதப்பதைப் பார்த்து நிற்பவள் - போலும், சுசீலா என்ற பெயர், மறுபடி உருக்கொண்டால் யாராக முடியும்?" (பிரக்ஞை வெளியில், பக். 80, 82). "உலகத்திலும் சிறு ஒளி உலாவுவதைக் கொஞ்சம் கொஞ்சம் இவன் உணர ஆரம்பித்தான்". "சமீப காலத்தில் அவன் வருத்தம் அதிகமாயிற்று. தன்னுள்ள வருத்தமே தனிப்பட்டு அழுதுகொண்டு இரவில் இருள் வழியே உருவற்ற ஊளையிட்டோடியது" "பொருந்தாத கதவுகளின் இடைவழியே, உள் வெளிச்சத்தின் சாய்வு ஒளிரேகை தெருவிலும், திண்ணைச் சுவரிலும் படித்திருந்தது. இவன் உள்ளத்தையும் அது சிறிது தடவி மன ஆறுதலை அளித்தது" "ஆகாயத்தில் இருள் பாய் விரிப்பின் நடுநடுவே வெளிச்சப்புள்ளி வர்ணந் தீட்டிக் கொண்டதே போன்று எண்ணிலா நட்சத்திரங்கள் பிரகாசித்தன. அவை ஆழ்ந்த துக்கத்தில் உதிராது, மடியாது, ஐயமுற்று வினாவி நிற்பவை போன்று தோன்றின இவனுக்கு. 'அவளால், பிரபஞ்ச ஜோதியே, அழகே, குன்றிவிட்டதுதான். உண்மை!...' அப்போது துக்க ஒலத்தில் வாடைக்காற்று வீச ஆரம்பித்தது. எட்டிப் போகும் நரியின் ஊளை, ஒரே இடத்தில் பதிந்து பரவும் பறைச்சேரி நாய்க்குரைப்பு போன்ற மிகக் கோரமான, சப்தங்கள்தான் இருள்வெளியில் மிதந்தன. அவளிடம் அடைபட்ட, உன்னத கானம் வெளியில் படரும் நாளை வேண்டிக் கூவும் பிரலாபிப்புப் போன்றுதான் அந்தச் சப்தங்கள் அவன் காதில் விழுந்தன" "பக்ஷிக்குரல்கள் கேட்டு பதிலளித்துக் கொண்டிருந்தன (பிரபஞ்ச கானம், பக். 98, 99,100, 104, 105, 107) "இந்த யோசனைகளெல்லாம் கொஞ்ச நேரத்திற்குத்தான். அவ்விடம்

விட்டகன்றதும் அவ்வளவும் அவள் சிந்தனைக்கு வெகுதூரத்தில் சென்று மறைந்தன'' தன்னை இழந்த தன் கணவனின் பிற்கால வாழ்க்கையைக் காண ஆவலுற்றவளே போன்று அவள் கண் ஓடி வெகு அப்பாலே எட்டிய வெற்று வெளியிற் சென்று பதிந்தது'' சீனுவின் மனதைப் பிளக்கும் துக்கமும் அவன் நெஞ்சிலேயே அடைப்பட்டு வெளிவரவும் இயலாது புழுங்கியது'' (சிகிச்சை, பக்.126, 131) ''ஒரு விளங்காத முன்னெச்சரிக்கை போலவும், வைகறையொளி பரவுவதற்கும் முன்பே, முதல் காகத்தின் கரைதல் ஒலி கேட்டது. பொழுது மிகத் தயக்கத்துடன் புலர்ந்தது'' (சிகிச்சை, பக்.120)

''வழிவழியாக வாழ்ந்து வந்த ஒவ்வொரு குடும்பப் பிரபல தாசிகள், அவர்களின் இசை நாட்டிய கலைத் தேர்ச்சி, பழைய பெரிய மனிதர்களுடைய ஈடுபாடு.. என அநேக ஞாபகங்களைக் கொண்ட தெரு அது'' ''பாலிய கால தன் வாழ்க்கை நினைவுகளை எதிர் மாடத்தில் தெரிந்த விளக்கொளியில் கண்டு நின்றாள் போலும்'' ''அவன் வருத்தத்தை, இவள் தன் சிரிப்பில் கலந்து கொண்டாள்.'' ''ஆங்காங்கே ஒளிபடராத இருள் மூலை முடுக்குகளில் பழைய நினைவுகள் ஒன்றுகூடிப் புரிந்துகொள்ள முடியா வகையில், சதி ஆலோசனை செய்து கொண்டிருந்தன போலும்.'' (உறவு, பந்தம், பாசம், பக்.140, 141, 143, 145). ''யாரோ ஒருவன் தன்னுடைய உன்மத்த மிகுதியில் ஜ்வலிக்கும், விலை கொள்ளா வைரங்களைக் கைநிறைய வாரி வாரி உயர வானத்தில் வீசி இறைத்தான் போலும். ஆயிரக் கணக்காக அவை அங்கேயே பதிந்து இன்னும் அவன் காரியத்தை நினைத்து மினுக்கி நகைக்கின்றன'' (எங்கிருந்தோ வந்தான், பக்.157) ''ஆதரவை அவனிடம் நாடின பார்வை அவள் கண்களினின்றும் விடுபட்டுச் சலித்து எட்டிய வெளியை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.'' ''அவள் கண்கள் போதை கொண்டு துள்ளி விளையாட வெளியே ஓடுவதாகத் தெரிந்தன'' ''பாழ்பட்ட வசீகரம் வெளியே உலாவ அவர்களைப் பார்க்கும்போது...'' (குடை நிழல், பக்.175, 177, 180). ''அந்த மரம் ஒருபோதும் நிசப்தம் கொள்ளாது, எந்நேரமும் பக்ஷி ஜாலங்களின் கூக்குரலைக் கொடுத்துக் கொண்டிருப்பது.'' ''எங்கே எங்கேயோ கண்காணாது படுத்துத் தூங்கியிருந்த நாய்களெல்லாம் தங்கள் இருப்பு மகத்துவத்தைப் பிரபலப்படுத்தக் குரைக்கவும் ஊளையிடவும் ஆரம்பித்தன. நாய்களுக்கும் தெரிவது தனக்குப் புரியவில்லையே என்ற விசனத்தில்கூட சிலசமயம் இவன் அழ வேண்டியிருந்தது'' ''எட்டிய வெளியில் ஒரு விளக்கொளி தெரிந்தது. உலகமே எரியத்

தோன்றுவதும் எட்டி இப்படிச் சிறு விளக்கெனத் தோற்றம் கொடுத்து இருக்கலாம்'' ''பக்கத்தில் நின்ற அப்பெரிய மரமும் கரைந்து கத்திக் கொண்டு ஆடியது'' (அத்துவான வெளி, பக்.196, 203, 205). ''இரண்டொரு ஆடுமாடுகள் செய்வதறியாது காலம் தவறி மேய்வதுபோன்று மேய்ந்து கொண்டிருந்தன.'' ''வாய்க்காலில் துணி துவைக்கும் பாராங்கல்லில் ஒரு சிறு குருவி உட்கார்ந்திருந்தது. அதுவும் திடீரென்று பறந்து அச்செடியில் ''ஏன், எங்கே'' என்று கத்திக் கொண்டு மறைந்துவிட்டது.'' ''கண்கள் மூடியே மாடுகள் அசைபோட்டுக் கொண்டு அலுப்பில் சமாதானமின்றி, அலைவது போன்று அங்குமிங்கும் நிழலில், சில ஊர்ந்தன'' ''எவ்வித உலக சப்தமும் பிரபஞ்ச பயங்கர நிசப்தத்தைத் தான், உணர்த்தியது'' ''மேலே கிளையில் உட்கார்ந்திருந்த ஒரு காகம், இவனைச் சந்தேகமாய்த் தலைசாய்த்துப் பார்த்தது'' ''பின்னிருந்து பறவைகளின் சந்தோஷமான, ''எங்கே, எங்கு'' கேள்விகள்.'' ''பக்ஷிகள் பகல் வேலை முடிவையும், இரவு ஒய்வு சந்தோஷத்தையும் பாடித் தெரிவித்தன'' ''கடைசிக் காகமும் பயந்து, தான் தனிப்பட்டதை உணர்ந்து, கரைந்து கொண்டே பறந்துவிட்டது. முதல் நக்ஷத்திரம், சிறு ஒளியொன்று தென்பட்டது. கடைசியாகத் தன் இருப்பை நிரூபிப்பது போல இருள் கொஞ்சம் கொஞ்சமாக உலகை மூட ஆரம்பித்தது. அன்று பகலும், பயமின்றி நேரே வரும் இரவிற்காக ஒதுங்கி, மிக வருத்தமாக வழிவிட்டுச் சென்றது'' ''மரங்களிடையே சலசலப்புச் சப்தம் நின்றது - வருத்தமாகத்தான்''' ''...தலையோ சுழன்று சுழன்று தனியே போவதாகத் தோன்றியது'' ''இன்பமான இளம் வெய்யிலும்...'' (கொஞ்சதூரம், பக்.218, 219, 220, 221, 222). ''அவன், அன்றிரவு திடீரென விழிப்படைந்தவன்போன்று வழக்கமான நேரத்திற்கு முன்பே, அயர்வு நீங்கி எழுந்தான். தன் முன் வாழ்வெலாம் எவ்வெவ்விடத்தில் எவ்வெவ்வகை கொண்டதாகிறது என்று, கனவின் நிழலென, உணர்விற்கப்பால் தோன்றி மறையக் கண்டான் போலும். எங்கிருந்தெல்லாமோ 'சா' குருவிகள் அலறலும் ஆங்காங்கே எட்டிய வெளியில் புதைந்து, கேள்வி பதில்களென விபரங்கொள்ளக் காத்து நின்று ஆந்தைகளின் சீறலும் கேட்டன. இரண்டொருவர் நடமாட்டமும் அந்த அகால வெளியில், வீதி வழியே உலாவி வரும் மௌனத்தைக் குலைக்கா வண்ணம், கேட்டு மறைய இருந்தது'' ''கேள்வி பதில் என்பதின்றியே, எதிரே இரவின் இருள் கவிந்து இருந்தது'' ''ரயிலடியே ஒரு அலாதி அநாதைப் பார்வை கொடுப்பது'' (தவறு, பக்.230, 231, 234). ''அந்தப் பறவை ''*கீகீ*'' என்று கூவிக் கொண்டே பறந்து விட்டது'' ''ஏன்? எங்கே?''

என்பதுபோல் நாய் குரைத்தது. பொறுக்காமல், அந்த நாயைத் துரத்தினபோது, நாய் சிரித்துக் கொண்டே "சரி-சரி" என்று சந்தேகத்துடன் ஆமோதித்துக் குரைத்துக் கொண்டே ஓடிவிட்டது" "*சீ சீ*! அவள் போய்விட்டாள் - என்றது அக்குருவி. "யார்? எங்கே?! என்றான் இவன். மிக வெட்கமுற்றுப் பறந்தோடிவிட்டது அக்குருவி. "குருவியே உனக்குப் புத்தியில்லை. ஏன் கத்திக் கத்திச் சாகிறாய்?" என்று கேட்டான்." "*சீ சீ* அவள் போய்விட்டாள்" அக்குருவி கத்தியது". "உள்ளே, மங்கலாக தீபம் ஒன்று, இருக்கும் ஏழ்மையைப் பார்க்க வெட்கமும், வருத்தமும் அடைவது போன்று எழுந்தும் விழுந்தும் அழுதுகொண்டு எரிந்தது" "தீபச்சுடர் சிறிது தூண்டி விடப்பட்டது. கோபமாகக் கடைசியில் எல்லாவற்றையும் பார்ப்பது போன்றேதான், நிமிர்ந்து ஜ்வலித்தது" (காதல் சாலை, பக்.240, 241, 243, 244, 245) "எத்தனையோ காலம் மௌனமாக நின்ற, அந்த இருட்டு அப்போது ஒரு உணர்ச்சி வேகத்தில் சப்தமாக உருவாகியது போலும்!" (நினைவுச்சுவடு, பக்.257)

முரண்பட்ட பொருள்கள்; எதிரெதிர் குணங்கள் சேர்ந்து கதைகளினூடே பின்னப்பட்டிருக்கின்றன. "இவனைப் பார்த்ததும் அலட்சியம் நிறைந்த மரியாதையோடு "என்ன வேண்டும்?" என்றாள். (சிகிச்சை, பக்.124) "அந்தத் திருமூர்த்திகளின் போட்டி நம்மை எல்லாம் உயிர் இல்லாமல் தவிக்கவிட்டுக் கொண்டிருக்கு" (சாவில் பிறந்த சிருஷ்டி, பக்.63) "தூக்கத்தில் மறையவும், விழிப்பில் மறக்கவும்" "ஒரு அசட்டுத்தனமான ஜாக்கிரதை" "ஒருவகையில் 'காதல்' கண்ட பெண் கலியாணமாகாத கைம்பெண் என்ற அபத்தம்தானே!" (பிரக்ஞை வெளியில், பக்.73, 76, 83). "எவ்வளவு அநியாய நியாயமெனப் படுகிறது சேகரன் மரணம்" (பிரக்ஞை வெளியில், பக்.81) "சப்தத்தினின்றும் சங்கீதம் விடுதலை பெற்று எட்டிய வெளியில் மௌனமான வியாபகம் கொள்கிறது" "அந்தி வேளையின் சூரிய ஒளி ஒரு இன்ப வேதனை நிறத்தில் தோன்றுகிறது" (மனக்கோலம், பக். 85, 88) மிக அற்புதமான, உன்னத ஜீவகளை கொண்டு.. அப்போது உலகமும் மஞ்சள் நிறத்தில் இன்ப வருத்த மயமாகத் தோன்றியது." (பிரபஞ்ச கானம், பக்.100) "ஒரு பயங்கரம் இனிமையைத் தூண்டி இழுக்கும் பிரமையை அடைந்தான் (உறவு, பந்தம், பாசம், பக். 141) "பழைய கதையை கனவெனக் கண் ணெதிரில் மடிவதைக் கண்டும், அதில் ஒரு வசீகரம் உங்களுக்குக் காண முடிகிறது. (உறவு, பந்தம், பாசம், பக். 143) "இறந்த காலம் தன் நிர்மாண வேலையைப் பெரிய கட்டுக்கோப்பில் செய்து வருகிறது" "ஒருக்கால் தூங்கினால் பக்கத்தறையிலிருந்து அவன் பாட்டு கேட்குமோ, "ஆனால்,

இப்போது, அந்த நினைவு உணர்ச்சி பெற்ற 'வருத்த - சந்தோஷம்' (எங்கிருந்தோ வந்தான். பக். 156,பக்.159). "அப்போது சுந்தரம் தன் மனத்திற்கு விரும்பிய அதிர்ச்சியைக் கொள்வான்" "என்னுள், என் இனிமை, தனிமையில் துன்புறுத்தாது நிற்கும் நாளைத்தான் நான் நாடுகிறேன்." (குடைநிழல், பக்.172, 181) -'வெகு பிரகாசமாகக் கண்கூச நன்கு அழகாகப் பிரேதம் எரிந்து கொண்டிருந்தது இவனுக்கு ஒரு வகையில் திருப்தி அளித்துத் தோன்றியது" (அத்துவான வெளி, பக். 204) 'உலகமே அநேக சப்தங்களிலும், இரைச்சலிலும் நிசப்தத் தோற்றத்தைக் கொண்டது." "எவ்வித உலக சப்தமும் பிரபஞ்ச பயங்கர நிசப்தத்தைத்தான் உணர்த்தியது" (கொஞ்ச தூரம், பக். 219, 220). "உலகு அவளை எவ்வளவு ஏளனமாக ஏற்க." "...வராண்டாவில் ஒரு அழகிய பெண் அலுப்பு மிகுதி ஆனந்தத்தில்" "அந்த இரவு இருள் வெளியில், கண்ட இருளானது மிகப் பிரகாசமாகத் தெரிந்து ஏனைய தோற்றங்கள் கொள்ளவும் ஏதுவாகியது." அடிக்கடி இவ்வித ஒளியும் இருளாகியது" (தவறு, பக். 230, 233, 237). "இப்போது என்னுடைய எண்ணங்கள் எவ்வளவு இனிமையாக மனத்தைத் துன்புறுத்து கின்றன" (நினைவுச்சுவடு, பக். 262) "கனவிலா உன் வசீகரத்தைக் கண்டேன். இப்போது விழிப்பின் இருளில் உன் அழகு மறைகிறதோ" அவள் மனது, எண்ணங்கள் சூனியப் பொருளைக் கொண்டதாக இருந்தது" (மாபெருங்காவியம், பக்.266, 269) "தன்னுடைய காவியம் அழிந்ததில் அவன் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை" (பக். 271) "அவள் அருகில் அவன் நெருங்க நெருங்கதான் அவளுக்கு வெகுதூரத்திலிருப்பதாக எண்ணம் ஏற்பட்டது அவனுக்கு " (ஏன்? பக். 286).

"அப்போது உன்னைப்பார்ப்பது அர்த்தமில்லாத ஆனந்தபார்வை" (எங்கிருந்தோ வந்தான். 159) "எனினும் சாசுவதத்தில் அவன் வெளியே நின்று கொண்டிருக்கமுடிகிறதா?" எவ்வளவு அறிவற்ற பலம் வேண்டியிருக்கிறது முதலில் சிறு காரியம் கூடச் செய்ய வழக்கம் கொண்டவுடன் வாழ்கையே சவத்தின் ஒரு பழக்கமாகிறது.(குடைநிழல்.ப.179)

அழியாச்சுடர், (பக்.36,41) நினைவுச் சுவடு (பக். 117) உறவு, பந்தம், பாசம் (பக். 138) அத்துவான வெளி (பக். 200) யில் கோயில் பற்றியும், மரங்கள் பற்றி அழியாச்சுடர் (பக்.37) அத்துவான வெளி (பக். 205) கொஞ்ச தூரம் (பக். 220) என்ற சிறுகதைகளில் வரும் பல பத்திகள் மிக அற்புதமான கவிதைகளாகவும் தத்துவச் சிந்தனைகளாகவும் இருக்கின்றன.

# 6

# மற்றவர்களின் பார்வையில் மௌனி

தமிழ் சிறுகதை வரலாற்றில் மௌனி அழியாத இடத்தைப்பெற்று விட்டார் என்பதில் ஐயமில்லை. சிறந்த தமிழ் இலக்கியப் படைப்பாளிகளான புதுமைப்பித்தன், க.நா. சுப்ரமண்யம், சி.சு. செல்லப்பா, தருமுசிவராமு, அசோகமித்ரன், சா. கந்தசாமி, ஜெயகாந்தன், நகுலன், சுந்தர ராமசாமி போன்றவர்களும் விமரிசகர்களான, வெங்கட்சாமிநாதன், தமிழவன், ஞானி, வேதசகாயகுமார் போன்றவர்களும் மௌனியின் படைப்பு மேதமையைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். மற்றும் ஈழத்து இலக்கிய விமர்சகர்கள் பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பி, கனகரட்னா போன்றவர்களும் மௌனியைப் பற்றி எழுதி யிருக்கிறார்கள். மௌனிக்கு சமுதாயப் பிரச்னைகளில் அக்கறை கிடையாது என்று குற்றம் சாட்டி ஒதுக்கும் இடதுசாரிகளும் உண்டு.

மௌனி படைப்புகளைப்பற்றி, நெய்வேலியில் 'வேர்கள்' என்ற இலக்கிய அமைப்பு ஜனவரி 1992ல் ஒருநாள் கருத்தரங்கமும், காலச்சுவடும் தலித் இலக்கிய இதழும் இணைந்து செப்டம்பர் 2001ல் பாண்டிச்சேரியில் ஒரு நாள் கருத்தரங்கமும் நடத்தின. அவ்வப்போது தமிழ்ச் சிற்றேடுகளில் மௌனியைப் பற்றி திறனாய்வுக் கட்டுரைகள் வந்தபடி இருக்கின்றன. இவை எல்லாவற்றிற்கும் மேலாக இளம் எழுத்தாளர்களும் வளரும் எழுத்தாளர்களும் மௌனியிடம் நிறையவே கற்றுக் கொள்ளலாம். பிற மொழிகளிலும் ஆங்கிலம், மலையாளம், பிரெஞ்சு, ஜெர்மனிலும், மௌனியின் கதைகள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. தில்லியில் இருக்கும் 'கதா' என்ற நிறுவனம் லக்ஷ்மி ஹோல்ம்ஸ்ராம் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த பதினோரு சிறுகதைகளைத் தனி நூலாக வெளியிட்டிருக்கிறது. கோலோன் ஜெர்மன் பல்கலைக்கழகத் தமிழ் துறையின் அன்றேயாஸீ ஸ்க்ட்மிலர், மௌனியின் எல்லா கதைகளையும் ஜெர்மனில் மொழி பெயர்த்திருக்கிறார். அவை தனி நூலாக வெளியிடப்படும்.

க.நா. சுப்ரமணியம் அவர்கள்தான் முதன் முதலாக மெளனியின் படைப்புத் திறனைப்பற்றி தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதிஎழுதி இலக்கிய உலகில் மெளனியின் இடத்தை உறுதிப்படுத்தியவர். அவர்தான் மெளனியின் சிறுகதைகளை முதன்முதலாகத் தொகுத்து 'அழியாச்சுடர்' என்ற தலைப்பில் புத்தகமாக 1959ல் வெளிக் கொண்டு வந்தவர். ''மெளனியைப் பற்றித் தமிழ் வாசகர்களை 'இடித்து'க் கூறுகிற காரியத்தை புதுமைப்பித்தன் தொடங்கினார். அதற்குப் பிறகு நான் சமயம் வாய்க்கும்போதெல்லாம் மெளனியின் பெயரைக் கூறி வந்திருக்கிறேன்... மெளனியின் தனித்துவம், புதுமைப் பித்தனின் இலக்கியத் தனித்வம் போலப் பூரணமானது - தனியானது. பழகப் பழகத் திருப்தி தருவது. சிந்தனையைக் கிளறுகிற எழுத்தைப் படித்துப் பழகாத தமிழ் வாசகர்களுக்கு, பத்திரிகைக் கதைகளை மட்டும் படித்துப் பழகியவர்களுக்கு மெளனியின் நடையும், விஷயமும், வேகமும், சிந்தனாலோகமும் முற்றிலும் புதுசாகவே இருக்கும். ஆனால் பழகப்பழக மெளனியின் கலை நன்கு புலனாகி விடும். அந்த அளவிற்கு மெளனியின் கதைகளைத் திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்துதான் புரிந்து கொள்ள முடியும்... மெளனியினுடைய எல்லாக் கதைகளிலுமே சிறுகதை அமைதி பிரமாதமாக அமைந்திருக்கிறது.'' (அழியாச்சுடர், 1959. க.நா.சு., பக்.3-4).

பேராசிரியர் கோ. கேசவன் 'தமிழ் சிறுகதையில் உருவம்' என்ற நூலில் (அன்னம் வெளியீடு, 1988) 'மெளனி கதைகள்' என்ற அத்தியாயத்தில் (பக். 85 - 93) மெளனி சிறுகதையின் உருவ அமைதியை மட்டுமே எடுத்துக் கொண்டு ஆய்வு செய்திருக்கிறார்.

பேராசிரியர் தமிழவன் 'மெளனியின் சிருஷ்டி மொழி, தகர்ப்பும் உருவமைப்பும்' (இருபதில் நவீனத் தமிழ் விமர்சனங்கள். காவ்யா வெளியீடு, 2000, பக்.98 - 113) என்ற கட்டுரையில் மொழியியல் அடிப்படையில் ஆய்வு செய்திருக்கிறார்.

தமிழின் மிகச் சிறந்த கவிஞரும், சிறுகதையாசிரியரும் நாவலாசிரி யருமான நகுலன் Thought என்ற ஆங்கில இதழிலும், 'மேலும்' என்ற தமிழ்ச் சிற்றேட்டிலும் தமிழில் எழுதிய கட்டுரைகள் சிறியனவாக இருந்தாலும் அவை இரத்தின சுருக்கமாக அற்புதமாக அமைந்திருக்கின்றன.

க.நா.சுவுக்கு அடுத்தபடியாக மெளனியைப்பற்றி மிக அதிகமாக எழுதியவர். சி.சு. செல்லப்பா. இவர் தனக்குப்பட்ட மெளனியின் நிறைகுறைகளையும் கட்டுரைகளாக, தான் விமர்சனத்திற்காகவே நடத்திய 'எழுத்து' பத்திரிகையில் வெளியிட்டார். அவை 'எழுத்து' இதழில் 1960 ம் ஆண்டில் (பக். 253, 256, 277, 280, 300, 304)

'மௌனியின் மனக்கோலம்' என்று தொடர் கட்டுரையாக வெளிவந்தன. இவை மட்டுமல்லாமல், அவர் எழுதியவை 'தமிழ்ச் சிறுகதை பிறக்கிறது' (1988 பீக்காக் பதிப்பகம் ) இருபத்தொன்றாம் அத்தியாயமாக மௌனியைப்பற்றி 'மனப்பிரமை' என்ற தலைப் பாகவும், 'மணிக்கொடி சிறுகதை முதல்வர்கள்' (1990ல் பீக்காக் வெளியீடு)நூலில் 'மௌனி' என்ற இறுதி அத்தியாயமாகவும் (பக்.118 - 135) வெளிவந்தன.

எழுத்தாளர்கள் தவிர பல்கலைக்கழகப் பேராசிரியர்களும் மௌனியைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். ஈழத்து தமிழ் விமர்சகரான பேராசிரியர் கார்த்திகேசு சிவத்தம்பி தன் நூலான 'தமிழில் சிறு கதையின் தோற்றமும் வளர்ச்சியும்' (தமிழ்ப் புத்தகாலயம், இரண்டாம் பதிப்பு, 1978) 'மௌனி கதைகள்' என்று ஓர் அத்தியாயம் (பக். 74, - 82) எழுதியிருக்கிறார். இரா. தண்டாயுதம் 'தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள் என்ற தன் நூலில் (தமிழ்ப் புத்தகாலயம், 1972) 'மௌனி' என்ற ஓர் அத்தியாயம். (பக். 52 - 72) எழுதியிருக்கிறார்.

தமிழ்ச் சிறுகதையாசிரியர்கள் சொல்வதைப் பார்ப்போம். ஜெயகாந்தன் * கல்கி (23.6.1985) வார இதழில் எழுதிய கட்டுரையி லிருந்து: "சிறுகதைகளை கதை என்கிற தரத்திலிருந்து கவிதை என்ற நிலைக்கு உயர்த்த அவரது எழுத்துக்கள் முயல்கின்றன...

"ஒரு காலத்தில் எழுத உட்காருவதற்கு முன்பு, மௌனியின் அழியாச்சுடர் தொகுதியில் உள்ள 'மாறுதல்' என்ற ஒரு கதையை நான் திரும்பத் திரும்பப் படித்திருக்கிறேன். அதற்குக் காரணம் ஏதும் இல்லை. அப்படியொரு பழக்கம் என்னிடம் இருந்தது... எல்லாருக்கும் அவரது கதைகள் புரியாதுதான். நாங்கள் வாசகர் களுக்காக எழுதுகிறோம். அவர் எங்களுக்காக எழுதுகிறார்' என்று எழுதுபவர்கள் சொல்லத் தகுந்த எழுத்துக்கள் மௌனியின் எழுத்துக்கள்... மறுமலர்ச்சி இலக்கிய சகாப்தத்தின் மறக்க முடியாத ஒரு பெயர் 'மௌனி'. படித்தவர்கள் மறக்க முடியாத படைப்புகள் அவரது சிறுகதைகள்."

ஈழத்தைச் சேர்ந்த ஏ.ஜே. கனகரட்னா 'மௌனி வழிபாடு' என்ற ஒரு கட்டுரையை 'சரஸ்வதி'யில் (பிப்ரவரி 1961) எழுதி வெளியிட்டார். நாவலாசிரியர் சா. கந்தசாமி தமிழ்மணியில் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். கனகரட்னாவின் இடதுசாரிப் பார்வை கொண்ட கட்டுரை மிக கடுமையான எதிர்மறையான விமர்சனத்தை முன் வைத்தது.

---

* சாகித்திய அகாதெமி விருதும் பரிசும்...பெற்றவர்

குறிப்பிடும்படியான தமிழ் நாவலாசிரியரும் சிறுகதையாசிரியருமான எம்.வி. வெங்கட்ராம் தம் நூலில் 'என் இலக்கிய நண்பர்கள்' (சவுத் ஏசியன் புக்ஸ், 1993) 'மௌனியும், எம்.வி.யும் (பக். 70 - 104) என்ற அத்தியாத்தில் மௌனியின் படைப்புகளையும், தான் அவரிடம் பழகிய நாள்களைப் பற்றியும் எழுதியிருக்கிறார்.

தலைசிறந்த நாவலாசிரியரும் சிறுகதையாசிரியருமான சுந்தர ராமசாமி, 'காற்றில் கலந்த பேரோசை' (காலச்சுவடு வெளியீடு, 1998) என்ற தன் நூலில் 'மௌனி' என்ற (பக்.114 - 116 ) கட்டுரை எழுதியிருக்கிறார்.

தமிழ் விமர்சகர்களில் தருமு சிவராமுவும், வெங்கட் சாமிநாதனும் எழுதிய கட்டுரைகள் மிக முக்கியமானவையாகும். இவை முறையே லயம் வெளியீடான 'தமிழின் நவீனத்துவம்' என்ற தொகுப்பு நூலிலும், அன்னம் 1982ல் வெளியிட்ட 'என் பார்வையில்' (பக்.5 - 39) பதிப்பிக்கப்பட்டுள்ளன. வெங்கட் சாமிநாதனின் - 'மௌன உலகின் வெளிப்பாடு' என்ற நீண்ட கட்டுரை மௌனியின் ஆழமான, அற்புதமான படைப்புத் திறனையும் மேதைமையும் வெளிக் கொண்டுவந்த கட்டுரை, 'மௌனி கதைகள்' புரிவதற்கும் அனுபவிக்கவும் உதவும் கட்டுரையாகும். இன்னொரு சிறந்த திறனாய்வாளரான ஞானி அவர்கள் தன் புத்தகமான 'படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியம்' (வைகறை வெளியீடு, 1994) 'மௌனி - ஒரு மறுபார்வை' (பக்.148, 163)என்ற கட்டுரையில் நடுநிலையோடு ஆய்வு செய்திருக்கிறார். ஆங்கிலப் பேராசிரியரும், கல்லூரி முதல்வருமாக இருந்த டாக்டர். ஜி.ஆர். பாலகிருஷ்ணன், மௌனியின் 'சாவில் பிறந்த சிருஷ்டி' உளவியல் அடிப்படையில் ஆய்வு செய்த கட்டுரை (தமிழ்ச் சிறுகதை - நேற்றும் இன்றும் ஐந்திணை வெளியீடு, 1992) வெளி வந்திருப்பதையும் குறிப்பிட வேண்டும். இளம் விமர்சகர்களான பிரேம்-ரமேஷ் அவர்கள் இணைந்து 'மௌனி எழுத்து - மரபும் கதையழிப்பின் வன்முறையும்' என்ற கட்டுரை (காவ்யாவின் 2000 வெளியிட்ட 'சிதைவுகளின் ஒழுங்கமைவு: பின் நவீனத்துவப் பிரச்சினைப்பாடுகள், பக். 180, 197) குறிப்பிடவேண்டியதாகும். திரும்பத் திரும்ப படிக்கப்பட வேண்டிய கட்டுரை அது.

அவ்வப்போது தமிழ்ச் சிற்றேடுகளில் கட்டுரைகள் வெளியிடப் பட்டுள்ளன. தமிழ் கவிஞரான ஞானக்கூத்தனின் இரண்டு கட்டுரைகள் 'மௌனியைப் படிப்பது' (கணையாழி - அக்டோபர் 1991, பக். 60

- 67) 'ஸ்போடா அமோகா மற்றும் மௌனி (கணயாழி, பிப்ரவரி 2002., பக்.20 - 26) குறிப்பிட வேண்டியவை. ப. கிருஷ்ணசாமியின் 'விரிவு படுத்தும் தமிழ்ப்புரிதல்கள்' (கணையாழி, பிப்ரவரி 2002 பக். 18, 19) குறிப்பிடப்பட வேண்டியது.

இதுவரை மௌனியைப்பற்றி மூன்று நூல்கள் வெளியிடப் பட்டுள்ளன. தமிழின் சிறந்த சிறுகதையாசிரியர்களில் ஒருவரான திலீப் குமாரால் 'மௌனியுடன் கொஞ்ச தூரம்' என்ற நூல் வானதி பதிப்பகத்தால் 1993ல் வெளியிடப்பட்டுள்ளது. இது 104 பக்கங் களைக் கொண்ட நூல். மௌனியின் இருபத்தி நான்கு கதைகளை ஒவ்வொன்றாக எடுத்துக்கொண்டு எட்டு அத்தியாயங்களாக அதாவது 'அறிமுகம்' 'மௌனியின் கதையுலகம்' 'மௌனியின் கதை வடிவம்' 'மௌனியின் பாத்திரப் படைப்பு' 'மௌனியின் மொழி நடை' 'மௌனியும் காஃப்காவும்- ஒரு சிறுகுறிப்பு' 'மௌனி கதைகள் - சிறு குறிப்புகள்' 'மௌனியின் வாழ்க்கை குறிப்பு' என எழுதப்பட்டிருக்கிறது.

இரண்டாவது நூலான 'மௌனி இலக்கியத்தடம்' 362 பக்கங்களை கொண்டது. கால்யா, ப. கிருஷ்ணசாமி அவர்களை தொகுப்பாசிரியராக 1993ம் ஆண்டில் வெளியிடப்பட்டது. இந்நூல் பகுதி-1. மௌனி மதிப்பீடு, பகுதி 2 மௌனி விமர்சனம், பகுதி 3 மௌனி நேர்முகம் எனப் பிரிக்கப்பட்டு இதில் பலரின் கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன. இத்தொகுப்பில் 'வேர்கள்' என்ற நெய்வேலி இலக்கிய இயக்கம் 1992 ஜனவரியில் நடத்திய கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரைகள் அதிக எண்ணிக்கையில் சேர்க்கப் பட்டுள்ளன. எம்.வேதசகாய குமார் எழுதிய 'காலத்தின் முன் மௌனி' என்ற கட்டுரை மௌனியைப் படிப்பதற்கு மிகவும் பயனுள்ள கட்டுரையாகும். மிக ஆழமான கட்டுரையாகும். இந்நூலின் தொகுப்பாசிரியரான ப. கிருஷ்ணசாமியின், 'மௌனியின் மனப்போர்' (பக். 126, 134) மௌனியை புரிந்துகொள்ள மிகவும் உபயோககரமானது.

இரா. கருப்புசுவாமி, 'மௌனியின் சிறுகதைக் கலை' என்ற, 1988 ஆம் ஆண்டு பல்கலைக்கழக நல்கைக் குழுவிற்கு அவர் சமர்ப்பித்த குறுகிய கால ஆய்வேட்டை 1998ல் வெளியிட்டிருக்கிறார். 122 பக்கங்கள் கொண்ட இந்நூல் இரண்டு பகுதிகளாக உள்ளது. பகுதி 1 'நுழை வாயில்' தமிழ்ச்சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்' 'மௌனியின் சிறுகதைக் கலை' 'மௌனியின் பார்வை' 'முடிவுரை' பகுதி 2 பிற்சேர்க்கை ஆவன.

பிற்சேர்க்கை

# இலக்கியச் சந்திப்புக்கள்

பேட்டி: மௌனி
பேட்டி கண்டவர்: கி. அ. சச்சிதானந்தம்

தமிழ்ச் சிறுகதை இலக்கிய வரலாற்றில் தனிச் சிகரமாக ஓங்கி நிற்கும் மௌனி அவர்கள் அறுபதாண்டுகள் அண்மையில் நிறைவெய்தினார். சிதம்பரத்தில் வாழ்ந்து வரும் அவரை ஒரு தடவை சந்தித்தாலே போதும், அவருடைய தும்பை மலர் போல் வெண்ணிறமான, அடர்ந்து திமிறி நிற்கும் தலைமுடியும்; சிற்பியின், ஓவியனின் விரல் களில் திணவு எடுக்கச் செய்யும் முகபாவமும், அவரின் உரையா டலும், அவரது உயர்ந்த கலைப்படைப்பைப் போலவே பசுமையாக நினைவில் நிற்கும்.

மௌனி அவர்கள் கணிதத்தில் பட்டம் பெற்றவர். ஆழ்ந்த இலக் கிய ஞானம் உடையவர்; சங்கீதத்தில் பயிற்சி கொண்டவர்; தத்து வத்தில் மிகுந்த ஈடுபாடு உடையவர்; மௌனியின் ஆளுமை - கணி தத்தால் ஏற்பட்ட அறிவு நுட்பமும், சங்கீதத்தால் உண்டான கலையு ணர்வின் நளினமும்; இலக்கியத்தால் வந்த கற்பனையும்; தத்துவம் அளித்த தீர்க்க முடியாத தாகமும் - இத்தனையும் உள்ளடங்கியது. அவருடன் உரையாடும்போது நம் மனக்கண்முன்பு ஒரு மாபெரும் உலகம் விரிகிறது.

உயர்ந்த இலக்கியப் படைப்பு ஒவ்வொரு தலைமுறைக்கும் புதுப் புது பொருளையும், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு அர்த்தத்தையும், ஒருவருக்கே வெவ்வேறு காலத்தில் வெவ்வேறாகத் தோன்றும்படியும் இருக்கும் என ஆங்கிலக் கவி ஆடன் கூறியிருப்பது மௌனியின் இலக்கியப் படைப்புக்கு மிகப் பொருந்தும். அவர் எழுதி அச்சில் வெளி வந்தது மிகக் குறைவுதான். ஆனால் எழுதி வைத்து அச்சில் வராதது சுமார் இரண்டாயிரம் பக்கங்களுக்கு மேல் இருக்கின்றன!

இரு உலகங்கள் இருக்கின்றன. அதில் ஒன்று காலத்தால் படைக் கப்பட்டது. இவ்வுலகத்தில் தவிர்க்க முடியாத தேவை, மாயை, துயரம், மாறுதல், அழிவு, இறப்பு யாவும் மாற்ற முடியாத சட்டங்களாக இருக்

கின்றன. மற்றோர் உலகமோ ஊழூழியால் - காலங்கடந்த நிரந்தரத்தால் படைக்கப்பட்டிருக்கிறது. இங்கே சுதந்திரம், அழகு, அமைதி கொலு வீற்றிருக்கின்றன. நம் சாதாரண அனுபவம் காலத்தால் படைக்கப்பட்ட அந்த முதல் உலகத்தில் நடைபெறுகிறது. ஆனால் அந்த இரண்டாம் உலகத்தின் காட்சி, தற்செயலான, சுயமாய் எழும் நினைவாலும், ஆழ்ந்த தியான உணர்வாலும் தோன்றும்போதே மறையும் அந்தக் காலத்துளிகளில் - கணங்களில் புனையா ஓவியம் போல் தெரிகிறது. மௌனி எனும் மாபெரும் கலைஞன் அந்தக் காலத் துளிகளின் மின்னொளியைப் பிடித்துக் காலத்துக்கு உட்பட்ட இவ்வுலக அனுபவத்தின் மேல் பாய்ச்சுகிறார். "எவற்றின் நடமாடும் நிழல்கள் நாம்?" என்றாரே அந்த நிழல்களின் மேல் தெரியும் வினா விடைகளைக் காணலாம்.

1.தங்கள் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புக்களையும் இலக்கியத்துறையுடன் தங்களுக்குத் தொடர்பு ஏற்பட்டது பற்றியும் தெரிவிக்கலாம் அல்லவா.?

நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு நாங்கள் மாணவர்களாக இருந்த காலத்தில், ஆங்கில இலக்கியத்தையும் பிறபாஷைகளிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட உலக இலக்கியங்களையும், படித்து உணர்ந்து ரஸிக்கும் ஆர்வம் பலரிடம் இருந்தது. அவர்களில் நானும் ஒருவன். ஒருவகை என் மனோபாவத்தைப் பொறுத்து, ஏன் நாமும் அதைப்போல தமிழில் எழுதமுயலக் கூடாதென்பதின் விளைவாக என் எழுத்து தோன்றியது போலும். வேறு ஒரு வகையிலும், நான் ஏன் அப்போது எழுத ஆரம்பித்தேன் என இப்போது என்னால் அனுமானிக்க முடியவில்லை.

1934லிலிருந்து முடிவிற்குள், அநேக அரைகுறை கதைகளையும், பூர்த்தியாகாத நான்கைந்தையும், ஒரு நெடுங்கதையும் எழுதி விட்டேன். என்னைப் பொருத்த மற்றொரு விஷயம் உருவாகிவிட்டதென்பதற்கு, அச்சுக்குப் போகும் வரையிலும் பலபல உருமாறத்தான் திரும்பத்திரும்ப எழுதுவது வழக்கம். இவ்விதமான என் வழக்கத்தினால் என் கதைகள் ஒன்றுக்கும் ஒரு நகல் எனச் சொல்லும்படிக்கு என்னிடம் ஒன்றும் இருந்ததில்லை. அச்சில் வந்து எனக்கு அனுப்பிய பிரதிகளையும் நான் கவனமாக காப்பாற்றுவது கிடையாது... 1959ல் என் கதைகளை சேகரம் செய்ய கா.நா.சு.வும் சி.சு.செ.யும் எடுத்துக் கொண்ட முயற்சி நான் சொல்லுவதை மெய்ப்பிக்கும்.

2. மணிக்கொடி காலம் பற்றித் தாங்கள் வாய்மொழியாக விளங்கிக் கொள்ள வாசகர்கள் ஆர்வமாக இருப்பார்கள். சிறிது கூறுங்களேன்? இந்தக் கேள்வியை நான் எப்படி விளங்கிக் கொண்டு பதிலளிப்பது என்பதில் கொஞ்சம் சிரமம் தோன்றுகிறது... 'மணிக் கொடி காலம்' என்பது 1932-38 வரை (வ.,ரா.-பி.எஸ்.ரா- பா.ரா. இவர்களை ஆசிரியராகக் கொண்டு) வெளியான காலத்தைக் குறிப்பாக எண்ணி, 'மணிக்கொடியில்' என்னுடைய பெரும் பான்மையான கதைகள் வந்ததென்பதை எண்ணிச் சொல்லுகிறேன்.

மேலே குறிப்பிட்ட ஆர்வம் கொண்ட அநேகருடைய கதைகள் அதில் வெளி வந்தன. அதிலும் பி.எஸ்.ரா. காலத்திலிருந்து சிறுகதைகளுக்கு எனவே வெளி வந்த பத்திரிகை என்பதில் அதிகமாகவே கதைகள் வந்தன. கதைகளின் புதுத் திருப்பமும், நோக்கும் அநேகர் கவனத்தை ஈர்க்க இருந்தன. அவைகளின் இலக்கிய தராதரத்தை, விமர்சகன் ஏற்று நன்கு தெளிந்து சொல்ல வேண்டியது கடமை.அக்கடமை என்னுடையது அல்ல என்பது என் அபிப்பிராயம். என் கதைகள் மணிக் கொடியில் வெளிவர நேர்ந்தது ஒரு யதேச்சை சம்பவமெனத்தான் எனக்குத் தோன்றுகிறது. யார் யார் கதைகள் அதில் எந்த எந்த காரணங்களுக்கு வெளி வந்தன என்பதை என்னால் சொல்ல இயலவில்லை. ஒருவகையில் என் கதைகள் வேறு எந்த பத்திரிகைகளிலோ அல்லது வெளிவராமலோ, இருந்து இருக்கலாமெனக் கொள்ளலாம்...

3. தங்களின் இலக்கியப் பார்வை அல்லது தத்துவத்தைக் கூறுவீர் களா?

என் இலக்கியத் தத்துவத்தையும் நோக்கையும் சிறிது கூற விரும்பி கேட்கிறீர்கள். இலக்கியம் என்பதற்கு பதில் 'கலை' என்பதாகக் கொண்டு சிறிது கூறுவது ஒரு வகையில் சுலபமாகத் தோன்றுகிறது. இது ஒரு வகையில் உங்களுக்கு ஆச்சரியமாகப் படலாம். இலக்கியம் என்பது கலையின் ஒரு பிரிவு என்பதில்... ஆனால் இலக்கியம் என்பது வார்த்தைகள் மூலம் செயல்படுவதின் காரணமாக வார்த்தைகள் என்பது அதன் அர்த்தத்தின் குறியீடு என்பதினாலும்... பாஷை என்பது இலக்கிய தத்துவத்திற்கு, என்ன உறவுடையது என்பது மிக சிரமங்கொடுக்கக்கூடியது. சில காலம் முன்பு நான் கலை இலக்கியம் என்பதைப்பற்றி நன்கு உணர்ந்தவன் என்ற இறுமாப்பு கொண்டிருந்தேன். தற்காலத்தில் சில விமர்சனத் தோரணைகளும், தமிழ் பாஷையின் விரிவும் நன்கு உணர

ஏற்பட்டதிலும். மேலும் சமீபமாக சில ஆங்கில புத்தகங்களை படிக்க நேர்ந்ததாலும், இந்த எண்ணம் எவ்வளவு அறிவீனம் என்ற நினைவு ஏற்படலாயிற்று. நான் கண்ட கலைத் தத்துவம் இலக்கிய தத்துவத் திற்கு வேறு முரணாக தோன்றியதால் அல்ல. வெளியீடுப் பற்றிய சிரமம். ஆங்கில பாஷை விரிவையும் நம் பாஷை குறைவையும் வருத்தத்தில் காண நேர்ந்தது. இதில் ஒரு அதிர்ச்சி தரும் விஷயம் என்னவென்றால் ஒரு புத்தகத்தின் கடைசியில் மற்றொரு புத்தக அடக்கத்தை இரண்டொரு வாக்கியங்களாக கொடுக்கப்பட்டது ஒன்று. ஆங்கிலத்தில் அப்படியே கொடுக்கிறேன். யாராவது பலருக்கு புரிய அதை தமிழாக்கம் செய்வார்களானால் என் நன்றி...

The self dimly feels or forefeels, itself as full of truth and beauty and unconsciously sets that further before it as an object a not self against itself. And so the self goes on to realise what it obscurely foreknows as real. It realizes it, although and because, it is aware of it as real. And in this, so far, art, philosophy, and religion are the same...(F.H.B).

It is only by a licence that the subject systems, even when we regard them as wholes can be made qualities of Reality. It is always under correction and on sufference that we term the Universe either Beautiful or Moral or True. And to venture further would be both useless and dangerous at once...(F.H.B)

கலையை எந்த அளவிற்கு கொண்டுபோக முடிகிறது என்பதை உணர முடியும்... இவைகளை தெரிந்துதான் ஒரு கலைஞன் படைக்க முடியும் என்பதாக நான் சொல்லவில்லை ... விமர்சககாரர்களுக்கு இது கட்டாயம் தெரிய வேண்டும் என்பதுதான்.

4. தங்களுக்கும் புதுமைப்பித்தனுக்கும் நேராகவோ கடித மூலமா கவோ தொடர்பு இருந்ததா? புதுமைப்பித்தனைப் பற்றித் தங்கள் கருத்து என்ன?

மணிக்கொடியில் என் இரண்டாவது கதை வெளி வந்தவுடன், எங்கள் ஊர்வாசியான ந.பி (பழைய மணிக்கொடி எழுத்தாளர் என்பதில்) எனக்கு அறிமுகமானார். அதோடுகூட அவர் நண்பர் என கு. ப. ரா. வும். என் வீட்டிற்கு சமீபத்தில் இருப்பவர்கள். முன்பே இவர்களை தெரியுமானாலும், நான் ஒரு கதாசிரியன் என்ற பாவத்தில் சொல்லுகிறேன். பிறகு நான் இவர்களை சந்தித்து பேசுவது வழக்கம். ந.பி. வக்கீலாக தொழிலாற்றிக் கொண்டிருந்தவர். அடிக்கடி அவரிடம்

பேசுவது முடியாது. கு.ப.ரா என்னைப் போன்றவர். அவரை அடிக்கடி சந்திக்கவும் பேசவும் வாய்ப்பிருந்தது. அநேகமாக இலக்கிய சர்ச்சைகள்தான். நானும் என்னை ஒருவிதத்தில் விமர்சகன் என சொல்லிக் கொள்ள உரிமை உண்டு. (அத்தொழிலை, வெகுவாக, என் எழுத்து வெளிவரும் முன்பு அதனிடம் உபயோகிக்கிறேன்). என் பேச்சில் அவர் சுவராஸ்யம் கண்டவர் போலும். அதை எழுதி தன்னிடம் கொடுக்கும்படி அநேக தரம் கேட்டதுண்டு. பேச்சுக்கும் எழுத்துக்கும் உள்ள வித்தியாசத்தை அடிக்கடி நான் அவரிடம் கூறுவது உண்டு.

ஒருநாள் கு.ப.ரா. என்னை ஒரு கதை எழுதிக் கொடுக்கும்படி கேட்டார். 1937ல் தினமணி ஆண்டு மலரை வெளியிடும் பொறுப்பை 'பு.பி.' ஏற்றுக் கொண்டு இருக்கிறார் என்றும், அவர் ஒரு துல்லியமான இலக்கிய உணர்வு கொண்டவரென்றும், மேலும் அவரே ஒரு உயர் இலக்கிய படைப்பாளி' எனவும் சொல்லி, என்னுடைய கதையை அவர் போடுமாறு அவருக்கு அனுப்புவதாகச் சொல்லிக் கேட்டார். 'பு.பி.'பற்றியும் மணிக்கொடியில் எழுதுவதிலிருந்து எனக்கு பெயர் பரிச்சியம் உண்டு. எனக்கு அப்போது எழுத ஒன்றும் தோன்றவில்லை. முடியவில்லை எனச் சொல்லவும் முடியவில்லை. ஆரம்ப காலத்தில் எழுதியிருந்த ஒரு அரைகுறை கதை - பிறகு எழுதிய ஒரு அரைகுறை இவைகளை ஒன்றாக சேர்த்து (பின்பகுதி முன்னாலும் முன்பகுதி பின்னாலும் எழுதப்பட்டது) ஒரு பெரிய அளவில் (எனக்கு நீள அளவில் எழுதுவது வழக்கமல்ல) ஒரு கதையென அவரிடம் கொடுத்தது தான், 'எங்கிருந்தோ வந்தான்' என்ற தலைப்பில் வெளி வந்தது... 1939ல் ஒரு தரம் சென்னை சென்ற போது அவரை நேராக சந்தித்தேன். பிறகு 1945 வரையில் அவ்வப்போது போகும்போது நேர்ந்தால் சந்திப்பது என்பதில் ஒரு நான்கைந்து தரம் சந்தித்து பேசி இருப்பேன். அதிகமாக தொடர்பு இல்லை எனினும் ஒருவரை ஒருவர் நன்கு தெரிந்து கொண்ட வகையில் தான் தோன்ற இருக்கிறது போலும். என்னைப்பற்றி 1946ல் வானொலியில் அவர் பேசியதும் எனக்குத் தெரியாது. சிதம்பரத்தில் வசித்த கா.நா.சு. பொன்னி என்ற ஒரு பத்திரிகையில் அதைக் கண்டு என்னிடம் காட்டியதுதான் தெரியும். ஒரு Ironical Attitude இயங்கீ ஒரு பிரமாதமான சாதனையை தான் புதுமைப்பித்தன் இலக்கிய படைப்பில் காட்டியிருக்கிறார். தமிழ் சிறுகதை உலகில் அவருக்கு நிச்சயம் ஒரு ஸ்தானம் உண்டு. இலக்கியப் பார்வை என்பதில் Ironic attitude க்கு எந்த மதிப்பு என்பது விமர்சனத்திற்கு உரியது... அவர் கா.நா.சு. சொல்லுகிறபடி 'அவருடைய Ironic attitude இயங்கி

பிரமாதமான சாதனை காட்டினாலும் ஒரு பூரண இலக்கியத்தன்மை உருப்பெறாத அளவில் ஒரு மேதையை தமிழ் நாடு இழந்ததெனக் கொள்ளுவது சரி (Ironic attitude ல் பூரண இலக்கிய தன்மை உருபெற முடியாது என்ற சித்தாந்தம் இதைவிட ஒரு உயரிய attitude இருக்கிறது என்பதைக் குறிக்கும். அதில் யாராவது இயங்குகிறார்களா என்பதையும் விமர்சகர்கள் தான் கூறவேண்டும்...)

5. தாங்கள் நீண்ட காலமாக எழுதாமலிருக்கிறீர்களே ஏன்? புதுமைப் பித்தன் தங்களைத் திருமூலரோடு ஒப்பிட்டிருக்கிறார். இனிமேல் திரு மந்திரம் ஒன்றாவது கிடைக்குமா?

ஏதோ ஒரு சமயம் எழுதியவர் தொடர்ந்து எழுத வேண்டும் என்கிற ஆவலில் என்னை இந்த கேள்வி கேட்டதற்கு நான் பெருமை கொள்ளுகிறேன். அப்போது நான் எப்படி எழுதினேன் என்பதே இப்போது எனக்குப் புரியவில்லை. எனக்கு நிறைய எழுத வேண்டும் என்ற ஆவல் எப்போதும் உண்டு. எப்படி எழுதுவது என்பது வரவர எழுத கடினமாகவே தோன்றுவதை உணருகிறேன்... இவ்வகையில் கடினமெனத் தோன்றிய தமிழ்பாஷை வெகுவாக என்னைப் பொருத்த வரையில் தொண்டாற்றிக் கொண்டு வருகிறது... என்னைத் திருமூலருடன் ஒப்பிட்டதை எதற்கென என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்த வாக்கியத்திற்கு பிறகு அவர் சொன்னதிலிருந்து ஒரு வகை அனுமானம் கொள்ளவும் என்னால் முடியாது இருக்கிறது. நான் திருமந்திரம் படித்ததில்லை... பு.பி. உயிரோடு இருந்தால் அவரை இதற்கு நான் பதிலளிக்க கேட்டிருப்பேன்...

6. தற்காலத் தமிழிலக்கியம் பற்றித் தங்கள் கருத்துக்கள் யாவை?

நான் எழுதுவதை சந்தர்ப்ப நிர்ப்பந்தத்தினாலல்லாது பிறருக்கு தெரியப்படுத்துவது இல்லை. ஒருவகையில் நான் எழுத்தாளன் என பிறருக்குக் காட்டிக் கொள்வதில் வெட்கம் கொள்ளுபவன் என வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள். இவ்வகையில் ஆதி நாட்களிலிருந்து என்னை எழுத்தாளனாக தெரிந்தவர்கள், எழுத்தாளர்களிலேயும் சிலர் தான் இருக்கிறார்கள். அதாவது ந. பி., பி.எஸ்.ரா., சி.சு.செ., க. நா. சு., ஆகியவர்கள்தான். இப்போது சமீப கால இலக்கிய உலக நடப்புகளை சில சமீப கால நண்பர்கள் மூலம் தெரிந்து கொண்டதில். என் அனுமான அபிப்பிராயமெனச் (தற்கால தமிழ் இலக்கியத்தில் சிறிதுதான் பரிச்சியம்) சொல்ல, சமய சந்தர்ப்ப

சூழ்நிலை சரியாகப்படவில்லை என்ற லௌகீக காரணத்தை முன்னிட்டு முடியவில்லை என்பதற்கு மன்னிக்கவும்...

7. சிறுகதை இலக்கியப் படைப்பில் தங்கள் நோக்கில் தொழில் நுணுக் கங்களாக எவற்றைக் கூறுகிறீர்கள்?

எந்த அம்சம் தொழில் நுணுக்கமென, நான் என் சிறுகதைப் படைப்பில் கையாண்டேன் என்பது சொல்லும் வகைக்கு தெளிவாக உணர்வு கொள்ளவில்லை. ஆனால் ஒன்று சொல்லலாம் என நினைக்கிறேன். எதைச் சொல்லுகிறோம் என்பது, எப்படிச் சொல்லுவது என்ற உணர்வுடன் கலந்து உருவாவதுதான் இலக்கியம். ஒன்றைவிட்டால் இரண்டும் கெட்டு ஒன்றுமே இலக்கியமெனத் தோன்ற உண்டாகாது.

8. 'தீபம்' பற்றி தங்கள் கருத்தென்ன?

இலக்கியத் தரமான பத்திரிகை நீண்ட காலம் வாழ்ந்தது இல்லை. நீடித்து வாழ்வதெல்லாம் இலக்கியதரமாக இருப்பதில்லை என்று தோன்ற, உருவாகிய ஒரு நியதியை 'தீபம்' பொய்யாக்கும் என நம்புகிறேன்.

- 'தீபம்' அக்டோபர் 1967

## பின்னிணைப்பு

**முதல் நூல்கள்**

1. அழியாச்சுடர் "மௌனி" க.நா.சு. தொகுத்தது. ஸ்டார் பிரசுரம், இரண்டாம் பதிப்பு, சென்னை 1961

2. மௌனி கதைகள் தொகுப்பு, ஒன்று, பீக்காக் பதிப்பகம், 1967, சென்னை

3. மௌனி கதைகள் தொகுப்பு இரண்டு க்ரியா வெளியீடு, 1978, சென்னை

4. மௌனியின் கதைகள் (முழுத் தொகுப்பு), பீக்காக் பதிப்பகம், 1991, சென்னை

**துணை நூல்கள்**

1. தமிழ் சிறுகதை பிறக்கிறது. சி.சு. செல்லப்பா, பீக்காக் பதிப்பகம், சென்னை, 1988

2. மணிக்கொடி சிறுகதை முதல்வர்கள், பீக்காக் பதிப்பகம், 1990, சென்னை

3. என் பார்வையில், வெங்கட் சாமிநாதன், அன்னம், சிவகங்கை, 1983

4. தமிழ்ச் சிறுகதைகளில் உருவம், கோ.கேசவன், அன்னம், சிவகங்கை 1988

5. காற்றில் கலந்த பேரோசை, சுந்தர ராமசாமி, காலச் சுவடு பதிப்பகம், 1998

6. தமிழ்ச்சிறுகதை, நேற்றும் இன்றும் மா. திருமலை, ஐந்திணை வெளியீடு, 1992

7. இருபதில் நவீனத் தமிழ் விமர்சனங்கள், தமிழவன் - காவ்யா வெளியீடு 2000

8. சிதைவுகளின் ஒழுங்கமைவு, பின் நவீனத்துவப் பிரச்சினைப் பாடுகள், பிரேம், ரமேஷ் - காவ்ய வெளியீடு, 2000

9. என் இலக்கிய நண்பர்கள், எம்.வி. வெங்கட்ராம், சவுத் ஏசியன் புக்ஸ், 1993

10. தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும் கார்திகேசு சிவத்தம்பி, தமிழ்ப்புத்தகாலயம், 1978

11. படைப்பியல் நோக்கில் தமிழ் இலக்கியம், ஞானி, வைகறை வெளியீடு, 1994

12. மணிக்கொடி காலம் பி.எஸ். ராமையா, மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1977

13. தமிழ்ச் சிறுகதை முன்னோடிகள், டாக்டர் இரா. தண்டாயுதம், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை 1974

## மௌனியைப் பற்றி மட்டுமேயான நூல்கள்

1. 'மௌனியுடன் கொஞ்ச தூரம்.' திலீப் குமார், வானதி பதிப்பகம், 1992

2. மௌனியின் இலக்கியத் தடம், தொகுப்பாசிரியர், ப.கிருஷ்ணசாமி, 1993, காவ்யா

4. மௌனியின் சிறுகதைக்கலை, இரா. கருப்புசுவாமி, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் வெளியீடு, 1998

5. டாக்டர் க. காந்தி, நூலாக வெளியிடப்படாத எம்.ஃபில் ஆய்வேடு

## இதழ்கள்

1. எழுத்து
2. கொல்லிப்பாவை
3. இலக்கிய வட்டம்
4. கணையாழி
5. கல்கி
6. தாய்
7. வஞ்சி நாடு
8. மேலும்
9. சரஸ்வதி
10. தீபம்

கி. அ. சச்சிதானந்தம் அவர்களிடம் மௌனி கொடுத்த அவரின் மூன்று நாட்குறிப்பு நோட்டுகளும் நூற்றுக்கும் மேலாக அவருக்கு எழுதிய கடிதங்களும் நேர்காணலும்.

ஆங்கில நூல்கள்

1. New Writing in India Adil Jussawalla, Penguin Book, 1974
2. Mouni, A Writers Writer's, Katha Classics, 1997
3. Tamil Literature, Dr. Kamil Zvelabil, Holland
4. Alfred Fraklin, Articles on Mouni

ஆங்கில பத்திரிகைகள்

1. Indian Express. Madras
2. Financial Express, Bombay
3. Indian Literature, New Delhi
4. Thought
5. Sameeksha

மௌனி (1907-1985) : சிறந்த சிறுகதை எழுத்தாளர் என்று கருதப்படுகிறார். இவர் எழுதிய மொத்த சிறுகதைகள் இருப்பத்திநான்கு ஆகும். இக்கதைகள், 'காதல்-தோல்வி', 'பொருள்களின் அநித்தியம்', 'காலம் நினைவு', 'மௌனம்', போன்றவற்றை அலசும். இக்கதைகள் பலதரப்பட்ட பரிமாணங்களும், பாணிகளும், நடைகளும் கொண்டுள்ளதாக கருதப்படுகிறது. ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு தடவை படிக்கும்போதும் ஒவ்வொரு அர்த்தத்தை கொடுக்கும். தமிழ் மரபுக்கும், போக்குக்கும் புதியனவாகவும் சிறப்பானதாகவும் விளங்க வழிவகுத்தவர் என்றும் தமிழ்ச்சிறுகதையின் திருமூலர் என்றும் கருதப்படுகிறார்.

கி.அ.சச்சிதானந்தம் : இந்நூலை படைத்தவர். கடந்த நாற்பதாண்டுகளாக சிறுகதைகள், குறுநாவல்கள், கட்டுரைகள், நூல் மதிப்புரைகள் எழுதிக்கொண்டு வருகிறார். 'எழுத்து', 'நடை', 'கசடதபற', போன்ற தமிழ்ச் சிற்றேடுகளில் எழுதியவர். இவரின் சிறுகதைகள் 'அம்மாவின் அத்தை', 'உயிரியக்கம்', என்ற தலைப்புகளிலும், மொழிப் பெயர்ப்பு நூல்களான சாமுவேல் பெக்கட்டின் 'கோடாவிற்காக காத்திருத்தல்', 'பனிமலைப் பிரதேசத்துக் கதைகள்' போன்ற நூல்களும் வெளியிடப்பட்டுள்ளன. இப்போது 'மௌனியின் கடிதங்கள்' 'நாட்குறிப்புகள்' போன்றவற்றை தொகுக்கும் பணியில் ஈடுபட்டுள்ளார்.

*Mouni* (Tamil) Rs. 25/-

ISBN-81-260-1711-2